கணபதிதுணை.

காஞ்சிபுரம்.

# குமரகோட்டப்பஞ்சரத்தினம்

## முதலியதோத்திரங்கள்.

---

இவை.

ஷை யூர்

வேளாண் குலத்தவரும்

சுத்த சைவாசாரிய பரம்பரையாருமாகிய

சேனாதிபதிதேசிகர் குமாரர்

**சிங்காரவேலுதேசிகரால்,**

இயற்றப்பட்டு,

மெய்கண்ட சந்தானம்

ஞானப்பிரகாச சுவாமிகள் ஆதீனத்துச்

சீடராகிய-திருமயிலை-வித்வான்

**சண்முகம்பிள்ளையால்,**

நான்காமுறை,

சென்

அஷ்ட லட்சுமி விலா அச்சுக் கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன,

---

1891 ௵ வ

விலை அ

உ

வேலுமயிலுந்துணை.

அரங்கேற்றியபோது அச்சிட்ட

# விளம்பரம்.

---

ஸ்ரீமத் காஞ்சிமா நகரத்திலுள்ள குமரகோட்டத்துத் திருக்
கோயில் கொண்டெழுந்தருளிய குமார சற்குருவின்மேல் பஞ்சரத்
தினமும் திருத்தணிகை ஆண்டவன்மேல் விருத்தப்பாமாலையும் வெ
ண்பாமாலையும் என்னால் இயற்றப்பட்டிருந்ததை இரத்தாக்ஷி-ஸு
ஐப்பசிமீ உஉ சோமவாரத்தன்று குமரகோட்டத்துக் குமாரசற்
குருவுக்கு மகாபிஷேகம் செய்வித்து தங்கத்தினாற்செய்த தொடுப்பு
களைச்சாத்தி. அன்றுமுதல் ஆறு நாளும் தினமொன்றுக்கு 400 பிரா
மண சந்தர்ப்பணையும் சைவாசாரியர்களில் 50 பேருக்கு மகேஸ்வர
பூசையு நடத்தி மாலைகளில் மகாவித்துவானாகிய புரசை - அஷ்டாவ
தானம். சபாபதிமுதலியாரவர்களைக் கொண்டு அரங்கேற்றுவிக்கப்
படுகிறபடியால் அதற்கு அன்பர்கள் யாவரும்வந்திருந்து அக்குமார
சற்குருவைத் தரிசித்தும் அவரது புகழாகிய தோத்திரப்பாவினங்
களைப் பிரசங்கவாயிலாகக் கேட்டும் ஆனந்தமடையவேண்டினேன்.

இரத்தாக்ஷிஸு
ஐப்பசிமீ 12உ

இங்ஙனம்,
கா- சிங்காரவேலுதேசிகன்,

உ

வேலுமயிலுந்துணை.

இரண்டாமுறை

அரங்கேற்றியபோதச்சிட்ட

# விளம்பரம்.

---

ஸ்ரீமத் அகிலாண்டகோடி பிரமாண்டநாயகராகிய சிவசுப்பிரமணியசுவாமிகள் எழுந்தருளிய தலங்களுள் அடியேன் தரிசனஞ்செய்த

க. திருத்தணிகை.
உ. திருப்போரூர்.
ங. குமரகோட்டம்.
ச. நாகமலையென்னும் திருச்செங்கோடு
ரு. விராலிமலை.
சா. திருப்பரங்கிரி.
எ. திருச்செந்தூர்.
அ. பழநி.

ஆகிய இவற்றில் ஒவ்வொருதலத்திற்கும் குமாரக்கடவுளுடைய மயில்வேல் இவற்றில் ஒவ்வொன்றிற்கும் கடைசியில் அடைக்கலப்பத்துடன் அடியேனால் தோத்திரஞ்செய்து அச்சிடப்பட்டிருக்கிற பதினொரு பதிகங்களையும் ஸ்ரீ காஞ்சிநகரத்துள்ள குமரகோட்டத்தில் திருக்கோயில்கொண்டெழுந்தருளிய குருபரனுக்கு நாளது தாது ஹு சித்திரைமீ கஅஉ சுக்கிரவாரம் காலையில் மஹா அபிஷேகஞ் செய்வித்து பிராமண சந்தர்ப்பணையும், மகேசுவரபூசையும் நடத்தி அடியேன் தங்கத்தினால் செய்வித்திருக்கிற நூற்றெட்டு வில்வதள மாலையை சுவாமிகளுக்கு சாத்துபடியுஞ் செய்வித்து ஷை ஆலயத்தில் மேற்கண்ட சுக்கிரவாரமுதல் அடுத்த ஆதிவாரம்வரையில் இந்த மூன்றுதினமும் சாயரக்ஷை (ச) மணிக்குமேல் மஹாவித்வானாகிய புரசை - அஷ்டாவதானம் சபாபதிமுதலியாரைக்கொண்டு அரங்கேற்றுதல் செய்விக்கப்படுகிறபடியால் யாவரும் வந்திருந்து நேத்திரோச்சவமாகத் தரிசித்தும் ஷை அரங்கேற்றுதலில் செய்யப்படும் பிரசங்கத்தைக் கேட்டும் ஆனந்திப்பீர்களெனக் கோருகின்றேன்.

இங்ஙனம்
அடியேன்

தாது ஹு சித்திரைமீ கஅஉ } ☞ கா-சிங்காரவேலுதேசிகன்.

ம. வித்வான்
சண்முகம்பிள்ளை யவர்களியற்றியது.

நதிகாட்டுஞ் செஞ்சடையான் றருங்குமரகோட்டத் தானளினத்தோற்கு
விதிகாட்டு நெறிமையினான மர்பலகேத்திரத் துதிகள் விளம்பினானல்
நிதிகாட்டுங் கரதலத்தான் சிங்காரவேலனென்ன நிலவுங்காஞ்சிப்
பதிகாட்டும் பெருந்தலமாமெனத் திகழும்பண்பினான் பரிவின்மாதோ.

சிவமயம்.

# சாற்றுக் கவிகள்.

வித்வான்

## கா - சபாபதிமுதலியாரியற்றியது.

கச்சிநகர்வாழுஞ்சிங் காரவேல்நாவலன்சொற்
கவின்சேர்மாலை
நச்சியணிதரவிரண்டு புயம்போதாதெனவுளத்து
நாடியேமுன்
நொச்சியிலையனையவடி மயிலிவருந்தணிகைமலை
நோன்றாள்வேலன்
அச்சிமயமேருவினும் பெரியபன்னிரண்டுபுய
மண்மினானல், (க)

செஞ்சொலுணருங்காஞ்சிச் சிங்காரவேலெனும்போர்ச்
செல்வன்முன்னாட்
கஞ்சனைமுன்சிறைப்படுத்துங் குமரகோட்டப்பெருமான்
களிக்கும்வண்ணம்
பஞ்சரத்தினம்புனைந்தா னெனக்கேட்டநவயணிநம்
பாலிலன்றி
விஞ்சுறவெங்கேட்டினு னேவென்னவிரும்பூது
மேவிற்றம்மா (உ)

## புரசை அட்டாவதானம் சபாபதிமுதலியா ரியற்றியது.

நேரிசைவெண்பா.

உரைக்குந்தொறுமினிமை யுண்டாகக்காஞ்சி
புரிக்குமரகோட்டம் புரக்கும்-பரைக்கொருசேய்
நேசமுறப்பஞ்சரத்ந நீடியசிங்காரவேல்
தேசிகனயந்தளித்தான் றேர்ந்து

கழிநெடில்விருத்தம்.

கருத்தணியநாவலர்க்குந் தெரிவையர்க்கு நிறையியலங் கவனநீடுந்
திருத்தணிகைமாலைவெண்பா மாலையிவைசிங்கார வேற்பே ரன்பன்
மருத்தணியமலர்நீபத் தார்புனைபன் னிருதோளான் வலியசூர்மா
செருத்தணியவேலெடுத்த குமரகுரு தாட்கணிந்தான் சிறப்பமாதோ.

முருகன் றுணை.

காஞ்சீபுரம்

# குமரகோட்டப்பஞ்சரத்திநம்.

## காப்பு.

பஞ்சரத்துக்கிள்ளை பணிமொழிவள் ளிக்கிறைவன்
பஞ்சரத்தி நம்புகலப் பார்த்தருளுங்-சஞ்சமுல்லை
ஆம்பல்வதனத் தமலையுவந்தருளும்
ஆம்பல்வதனத் தவன்.

## ஆசிரியவிருத்தம்.

சீர்பூத்த தினகரரோர் பன்னிருவருந் தஞ்
செழுங்கதிர் திரிந்தழுங்கத்
திகழுநவ மணிகுயின் றொளிகாலு மோலிமலி
திரிபறு சிரத்தி னமைவு
மேர்பூத் தெழுங்கமல மலர்பொருவ விலகிவள
ரிணையறு முகத்தி னெழிலு
மேதமறு கருணைபொழி விழியொடிரு செவியு மொளி
ரிசைவரத முட னபயமும்
நீர்பூத்த கண்டிகையொ டக்கவட முடனிகழ
நினதடிமை மகிழ வருவாய்
நிறைகோல மறைமூல வொளிசால நிகழ்வேல
நீலவிழி மாதுபால
கூர்பூத்த வேல்விடுத் தவுணரைக் கொன் றமரர்
கொண்டாட நின்ற குமர
குறவர்வீட் டுக்குமரி வதுவைவேட் டுத் தழுவு
குமரகோட் டக் குரவனே. (க)

வட்டவாய்க் கமலமிசை வதிவிதியை வருக வென
வாய்வின் டதட்டி யுட்கி
வந்தவனை நந்தலில் பந்தமுள் ளாக்கி நின்
வழியுரை நடப்ப தாக்கி
நட்டம்வர வொட்டாது நனிசரா சரமதனை
நல்குதொழி லன்புநாட்டி

நஞ்சுண்ட நாதற்கு முபதேச குருவாகி
நான்மறை துதிக்க நின்றோய்
இட்டமா நினதடிகள் சிந்திக்கி லேற்கும்வினை
தீர்த்தின்ப மேயருளுவாய்
சிவபோத குணாதீத திகழ்பாத புகழ்வேத
தீரவீரப் பிரக்கியாத
கொட்டுமுழ வுக்கிசைய நட்டமிடு மங்கையர்கள்
கூட்டமக லாக்கோயி லாய்
குறவர்வீட் டுச்குமரி வதுவைவேட் டுத்தழுவு
குமரகோட் டக்குரவனே. (உ)

என்றுமுன தெதிர்நின்று பணிகின்ற பரிசொன்றி
யேதங் களைக் களைந்திட்
டிருமூன் றெனுமெழுத் துருவுளத் துச்சரித்
தேத்தா விறைஞ்சு மவருக்
கொன்றுமுட லுயிர்குடித் திழிதொழிலி னுவகைகொண்
டொழுகுநம னூரொழித்திட்
டும்பரொடு மிம்பர்மற் றேனையர்க ளேவல்கொண்
டுவகையொ டிருப்ப தாக்கிக்
கன்றுகுணில் கொண்டவரி நின்றுபுகழ் நின்மகிமை
கசடனேன் கழறவசமோ
கருபாச மொழிநாச கிரிவாச கலியீச
காஞ்சிநகர் நேசவாச
குன்றுருவ மென்றுசொல நின்றவசு ரன்கெடக்
கூர்வேல் விடுத்தகோவே
குறவர்வீட் டுக்குமரி வதுவைவேட் டுத்தழுவு
குமரகோட் டக்குரவனே. (௩)

பாதிமதி சூடுசடை யாதிதரு மாங்கனிப்
பாங்காக வாங்க வேண்டிப்
பரபரத் துலகமுழு வதையுமொரு நொடியில்வரு
பச்சைமயி லிச்சையினிவர்
தேதமுறு பேதைமன தோடுதுதி யாதுமொ
ரிமைப்போது சிந்தியாது
மீட்டுவினை யாவுமற வோட்டியருள் கூட்டியினி
தேழைகண் காணவருவாய்

தீர்த்புண ராதமலா மீதிலுறை மாதுபதி
சித்தத் துவக்குமருகா
சிவயோக ரகமாக வுறையேக குணயோக
சித்தசன் விரும்புமாக
கோதுதபு மாதவரொ டுயர்பொதிய வரையி லுறை
கும்பமுனி நம்புகுருவே
குறவர்வீட் டுக்குமரி வதுவைவேட் டுத்தழுவு
குமரகோட் டக்குரவனே. (௪)

பரவியெழு பரவைபுடை சூழுலக ரடியனைப்
பழியாதிருக்க வேண்டும்
பகலவன்மு னகலுமிசி போலுமென் வினையி னிருள்
பரவா திருக்க வேண்டும்
விரைவிரவு மரைமலரி லுறைபிரம னினுமெழுத
வேண்டா திருக்க வேண்டும்
வெய்யதுய ரழலினுழன் மனமுனது கழலி னிழல்
விலகா திருக்க வேண்டும்
கரவிலடி யவரருளு மிகபரமு மரு ளியெக்
காலுநீ காக்க வேண்டும்
கனதீர சினயார வருசூர னுயிர்தீர
காய்ந்தகாம் பீரவீர
குரவமல ரளகவுமை யருள்புதல்வ வைங்கரக்
குஞ்சரற் கிளைய குகனே
குறவர்வீட் டுக்குமரி வதுவைவேட் டுத்தழுவு
குமரகோட் டக்குரவனே. (௫)

குமரகோட்டப் பஞ்சரத்திநம்.

முற்றுப் பெற்றது.

---

சிவமயம்.

# தணிகாசலமாலை.

## காப்பு.

அன்பார்திருத்தணிகை யண்ணல்பாமாலைசொலற்
கின்பாகவோகைகொளுமென்னெஞ்சே-முன்பாகி
வேழமுகத்தம்புகைக்கும் வேளையெரித்தானீன்ற
வேழமுகத்தான்கழலை வேண்டு

## எழுசீர்க்கழிநெடில்ஆசிரியவிருத்தம்

நீர்மலிகடல்சூழ் நிலமகண்முகம்போ னிகழ்தரவளர்ந்தெழுத ணிகைக், கார்மலிசிகரி வரைமிசையிருந்து காசினியோர்வினையொழித் துச், சீர்மலிதரவே வாழ்வவர்க்களிக்குந் தேவனே சிறியனேற் கருள் வாய், தார்மலி பொதும்பர்சூழ்திருத்தணிகைச் சைலனே சரவணோற் பவனே. (க)

வேலையினடுவண் விளங்கியகொக்கை வெகுண்டுவீழ்த்திட்டுச்சூர் தடிந்து, மாலையன்முதலாம் வானவரிடுக்கண் மாற்றியோய்நின் றிருப் புகழ்ப்பா, மாலையொன்றுனது மருமலர்க்கழலின் மாண்புறப்புனைந்த ணிதரற்கென், ருலம்வந்தருடா தபாதிதணிகைச் சைலனேசரவ ணோற்பவனே. (உ)

உம்பரோடுலக ருவகைகொண்டாட வொழிவினைத்துயருண்ணு டக், கிம்புருவீணைவல்லவர்பாடக் கிளரியக்கடலொலிநீட, வம்பு றுகொங்கைக்குறமகட் கூட வாழுநின்னருளையான்றேடச், சம்பிரம மாகவந்தருடணிகைச் சைலனேசரவணோற்பவனே, (௩)

என்றுநின்கோயி லெதிர்ந்துகைகுவித்தாங் கிருகழலிறைஞ்சிநன் கேத்த,ஒன்றுமன்பில்லே னெனினுமென்வினைதீர்த் தொழித்தருடரு தனின்கடனுங்,கன்றியேகமல மலரினன்முகவன் கருத்தழிந்திறைஞ் சனுமன்னுன், றன்றுயரொழித்த சண்முகாதணிகைச் சைலனேசரவ ணோற்பவனே. (௪)

அண்டராக்காத்தவறுமுகத்தரசே யைம்புலக்கோள்களைந்தரு ள்வாய், கண்டவர்வினையைக் கழிப்பனெங்கடவுட் காசினிமாந்தர்கா

ளன்பு, கொண்டிவணடைதீ ரெனக்கொடிக்கரத்தாற் கூவலேங்கிர்தரு மடமும், தண்டலேகளுஞ்சார்ந் தணிதருதணிகைச் சைலனே சரவ ணேற்பவனே. (ரு)

பொங்குநீர்க்கங்கைப் புரிசடைக்கற்றைப் புராந்தகனெனும்பெ யர்ப்பெரியோன், அங்கமாரமுதத் தீஞ்சொலம்பிகையா ளகமகிழ்ந்து தவியபுதல்வ, மங்குல்கண்டுஞ்சுமணிமுடிக்கோயின் வலஞ்செய்து தொழலெனக்கருள்வாய், சங்குலாங்கமலத்தடமிளிர்தணிகைச் சைல னேசரவணேற்பவனே. (சு)

இந்திரர்முதலா மிமையவரிறைஞ்ச வெழிற்கணி கையர்நட மி சைக்கச், சுந்தரமிகுந்த தோகையரிருபாற் றுலங்கிடச் சூரியனொளி யைப், பிந்திடப்புரிகே தாரமீப்பிறங்கும் பெருமையைப் பித்தனுன் காணத், தந்தருள்குவையோ சண்முகாதணிகைச் சைலனே சரவ ணேற்பவனே. (எ)

கடலுடையாடைக் காசினியோர்தங் கருவினைதவிர்த்தகாங்கே யா, படரிருண்மேனிச்செய்பகட்பேழ்வாய்ப் பகடிவர்ந்தெமன்பரபர த்து, நடந்தெனைத்தொடருநாளினின்னளின நற்கழறுதிக்கவெற்கரு ள்வாய், தடவரைபுடைகொண் டிலகுறுதணிகைச் சைலனேசரவணே ற்பவனே. (அ)

வானுறநிமிர்ந்த வரையினைவெட்டி வலியிழந் தேங்கிநிற்பவர்போ ல், ஊனெடுத்திந்நா ளொழித்தனன்கால மோரில்வெம்மாயையின்சதி க்குள், ஆனதென்றுணர்ந்து நற்றவமியற்ற வறிவிலிக்கருள்புரிகு வையோ, தானநன்குஞற்று மறிஞர்வாழ்தணிகைச் சைலனேசரவ ணேற்பவனே. (கூ)

மூதறிவுடையோ ரவையிடமணுகேன் மொய்மலரொடு புனற் கொண்டுன், போதொளிர்கழலிட் டிறைஞ்சிடேனெனினும் புண்ணி யவெனதுவெவ்வினையா, மேதருமகற்றி யினிப்புரந்திலேயே லேது வே றுதவியெற்கருள்பூந், தாதுகுத்தொளிரும் பொழில்வளர்தணி கைச் சைலனேசரவணேற்பவனே. (ய)

மண்ணொடுபெண்ணு டகம்பிறப்பிறப்பு மாண்புறுகுலநலம்வே ண்டேன், திண்ணமீதுரைப்பேன் செவ்விதிற்கேட்பாய் செந்திலம்பதி தனினுளும், நண்ணுமாண்புடையாய் நறுமலர்த்தொடையாய் நன்கு

னைத்தொழுதலொன்றருள்வாய், தண்ணுறுங்கொண்மூத் தவழ்தருந் தணிகைச் சைலனேசரவணோற்பவனே. (கக)

நறைமலர்க்கோயி லுன்முகப்பிரம னுகநற் சேக்கையாக்கொண்டோன், குறைசெயுமனத்த ராயின னொன்னுக் கொழுங்கனற்குன்றமாய்நின்ற, பிறையணிசடிலப் பிஞ்ஞகனீன்ற பெரியவென்னரும்பிணிதவிர்ப்பாய், தறையுளோர்வணங்கி யேத்துறுதணிகைச் சைலனேசரவணோற்பவனே. (கஉ)

மலைவுறுமனத்தே னின்மலர்க்கழலில் வணங்கிநின்றேத்து நாளுளதோ, மலைமுழைவதியும் வண்மையா னேக்கால் வாய்ந்தமெய்ப் பூதியின்வளனால், நிலையிருந் தெழாத நீர்மையாற் றவஞ்செய் நித்தர்வா ளரிதனைப்பொருவு, தலையுறத்தனாயி னேங்குறுதணிகைச் சைலனேசரவணோற்பவனே. (கங)

பஞ்சரத்திருந்து வள்ளவாயமுதைப் பருகிவாழ்ந் திடுபசுங் கிளி, யஞ்சுறக்கிளத்து மொழிக்குறமகட்கா வவிர்நறைதிறைக்குறு மழகை, மிஞ்சுறவெடுத்த வேடத்தாய்மேலாய் மிளிர்தருகூடத்தா யுனேயே, தஞ்சமென் றடைந்தேற் கருளுதிதணிகைச் சைலனேசரவணோற்பவனே. (கச)

பந்தமற்றியங்கு மாதவரோதுங்கும் பாதவக் குழுவினோர் பாங்கர், நந்தலில்கொன்றை யடிகுறுங்காயா நன்குறல் மால்சிவ னடிக்கண், விந்தையாமலர்க்க ணிடவடியிறைஞ்சி விழைவுற லேய்க்குநீள்பொழிலாய், சந்ததம்போற்று மெனக்கருடணிகைச் சைலனேசரவணோற்பவனே. (கரு)

சந்திரமோலித் தாணுவின்றன்கை தங்குமாங்கனிபெறற் குன்னிச், சுந்தரமயின்மீ தேறிநீடுருவ சுந்தனா வலம்வரு தூயோய், இந்திரற்குறுநோய் தவிர்த்தவா வேழை யிடரிலாதுய்யுநாளுளதோ, சந்திரனணவவளர்ந்தெழுதணிகைச் சைலனேசரவணோற்பவனே. (கசு)

சிரமுறச்செங்கை சேர்த்திநின்றுனைச் செம்மனத் தோடுநின் றேத்தேன், வரம்பெறு மடியர் குழாத்தினைக் குறுகி வாழ்ந்திடாவேழையேனீட்டும், பரம்பரைதருதீ வினைதவிர்ப்பாய்கொற் பாருளார்மனனடுக்குறுவேள், சரமெலாமளிக்குர் தடம்பொழிற்றணிகைச் சைலனேசரவணோற்பவனே. (கஎ)

மழ்விடையுகைத்தார்க் கருளியமகவே மாகரும்மனத்துமா தவர்போல், அழலிடையடைந்த மெழுகெனவுள்ள மயர்ந்துநெக் குருகிமிக்கேங்கிக், கழலினிதேத்தும் பரிசிலாவெனையுங் கடைக்கணித்தாளுநாளுளதோ தழலிடைமுயல்மா தவத்தர்வாழ்தணிகைச் சைலனே சரவணோற்பவனே. (கஅ)

பொறிவழிப்புகுந்து கொடுந்தொழிற்புரியும் புல்லியபுலனெனும்புளிஞர், அறிவெனத்தோன்று மரும்பொருள்கவர்வா னுபினரஞ்சினே னன்னோர், செறிதலையொழித்தென் பாலருடருதி செங்கண்மாலேத்துசெவ்வேளே, தறிசிரார்தவத்த ரார்தருதணிகைச் சைலனே சரவணோற்பவனே. (ககூ)

பந்தமுற்றியங்கும் பதகனேனுனது பதமலர்போற்றிடப் பணிப்பாய்,மந்திகண்டேமாப் புறவுபர்சாரன் மரன்வழி யிழிதருவானோர், மைந்துறுகழைக்கூத் தாடுறல்போல வளம்படமிகவளர்ந் தோங்குஞ், சந்தமார்கந்தப் பொழில்வளர்தணிகைச் சைலனேசரவணோற்பவனே

பாவினாலுன்சீர் பண்புறவமைத்துப் படித்திடேன் பரிவுளனாகிநாவினாலேத்த நயக்கிலேனுனது நல்லருளளிப்பைகொ ளளினப், பூவினிலிவர்ந்தோன் பூமுழுதளந்தோன் பொன்னகர்க் கிறைமைபூண்டுயர்ந்தோன், தாவிலாதேத்த வுபர்ந்தெழுதணிகைச் சைலனே சரவணோற்பவனே. (உக)

நுடங்கிடைமடவார் மையலிற்சிக்கி நுண்ணறிவழிந்த வெற்கிரங்காய், விடங்குலா மிடற்று வித்தகனுவக்கும் வேலவா பழவினை யினியென், னிடங்கொளா தகற்றி யினியசின்றெண்டே யென்றும்யானியற்றிடப் பணிப்பாய், தடங்கெழுசாரற் சிகரியார்தணிகைச் சைலனேசரவணோற்பவனே. (உஉ)

உண்மையா யுலக முழுவதும்போற்று மொருவனே யுன்கழலிரண்டும், பண்ணுறப்பூசித் தேத்துமெய்யன்பின் பான்மைவிட் டுளமுழுமூட, னண்ணுறுந் தொண்ட னுகநின்கருணை நயந்தருள் புரிந்திடுகுவையோ, தண்ணியதடஞ்சூழ்ந் தொளிர்தருதணிகைச் சைலனே சரவணோற்பவனே. (உங)

சங்குசக் கரம்வாழ் கரந்தனுமன்னான் றயனுந் தாழ்ந்தினி தேத்தும்,பொங்கரா முடித்த புராரியையினது போதகளைக் காத்திய புனி

தா, மங்களா கரனேமயிலுகைப்பவனே மாசறுத்தாளலுன் கடனே, தங்கமால்வரையும் பணிதருதணிகைச் சைலனே சரவணோற்பவனே.

வாட்டமிட்டசுரர் வாழ்வினுந்தோட வானவரின்பமேகூடத், திட்டியகூர்வேலோட்டியாங்கவர்தஞ் சேட்டைகள்வாட்டியதீரா, நாட்டு முன்புகழைநாயினேனேத்த நல்வரமருளுதிசெழுமுட், டாட்டிகழ்க மலத்தடமிறைதணிகைச் சைலனேசரவணோற்பவனே. (உரு)

முன்னவன்முனிவின்மொழிந்ததற்கேங்கி மூதறிவுடையநற்கிரன், பன்னகம்பரித்தபார்மிசைவெள்ளிப் பருப்பதத்துயர்பனிச்சாரற், றுன்னிடற்கரிதென் றேர்ந்தவற்காத்த தூயனேதுகளுறுநாயேன், றன்னிடர் தவிர்க்கவருகுவைதணிகைச் சைலனே சரவணோற்பவனே,

ஒருமருப்போங்க விருமருப்பினதா யுற்றிடற்குன்னியோர் மனைப்பூ, வருதிருவேய்க்கு மான்மகளோட்ட மதுவினைவேட்டவா விளங்குன், இருபெருங்கழலை யேத்துமெற்கருள்வா யிருநிலத்தன்பர் கட்கருளைத், தருதிருமுருகா தடஞ்சூலாந்தணிகைச் சைலனே சரவணோற்பவனே. (உஎ)

திருமறுமார்பன் றிருவுளத்தென்றுந் திகைத்திடாதிருத்தி நின்றேத்த,வருமிருமூன்று முகமுடைத்தேவே வகையிலேற்கருளிலென் றுழ்வே, குருகமர்தடந்தோய் கொடிச்சியர்முகம்வெண் குளிர்மதியெனக்குமுதமிரந், தரமலர்ந்திடவோங் கணிதிகழ்தணிகைச் சைலனே சரவணோற்பவனே. (உஅ)

வேங்கைவாழடவி வேட்டுவர்மருண்டு வெருவரவேங்கையாய் நின்ற, காங்கெயாவென்றுன் கழலிணைப்பணியாக் கசடனேற்கன்புமி குவையோ, மாங்குயில்கூவ வமர்க்கெழுமாரன் மனஞ்சலித்துழறர மெய்ம்மை, தாங்குறுதவத்தரேத்துறுதணிகைச் சைலனே சரவணோற்பவனே. (உகூ)

சீரணிதிருவே ரகத்துறைதேவே சிறியனேற்கருள்செய வருவாய், வார்கழைகுமைத்திட் டட்டதீம்புகையை வளரடம்பயின்மயில் காணூஉக், கார்கிறக்கமஞ்சுன் முகிலெனக்கருதிக் களிப்புடனொன்றொடொன் றியல்சேர், சார்தருசோலை யிடைதருதணிகைச் சைலனே சரவணோற்பவனே. (௩௰)

அளிபிறைநிலைவே லணிதரும்ழ்சாலை யப்புமீப் படரிளவல்லி கனிதூங்கிர்தரளங் கபிரவல்லியின் கழகுகக்துகங்கலுழ விழையால், வலி

யுணுமரவம் வாழைசூல்வரால்சீர் வண்டரா சனநடைவாய்ந்த, தளிரிய ற்கேங்கா தெனையருள் தணிகைச் சைலனே சரவணோற்பவனே. (௩௧)

விரியிதழ்த்துணரார் விரைமலர்த்தெரியல் வேய்ந்தசெவ்வான னேர் வேணித், திரிபுரம்பொடித்த சிவபிரானருளுந் தேவியோடுறைவ ரை யெடுத்த, அரிதிகரரக்க னண்மையன்றொழித்த வைங்கரற்கிளைய நின்னரிதாஞ், சரிதமேபுகல்வேற் கருள்வையோதணிகைச் சைலனே சரவணோற்பவனே. (௩௨)

துடியிடையன்ன நடையினர்விருப்பாற் றுயருழந்தனதுதொண் டர்கடம், அடியடைந்திறைஞ்சு மவாவினைத்தவிர்ந்தேற் கருளுதிவே ட்டுவர் நமது,குடிமகட்கெல்லா மரசியார்வாழுங் கோயிலென் றெணிக்குறு குதல்போற், றடிகெழுமுகின்மீப் படர்ந்துறுதணிகைச் சைலனே சரவணோற்பவனே. (௩௩)

தண்டுழாய்த்தொடையன் தாமரைத்தவிசன் சதமகத்திறைமுதலானோர், கண்டுதாழ்ந் திறைஞ்சற் கரியநின்கழலியான் கண்ணினாற் காண்பதற் கெளிதோ, வண்டுபாட்டயரும் பேட்டொடுமுண்டு வருமதுகரமுமுண்டுவப்பத், தண்டுளியளிக்குந்தடம்பொழிற்றணிகைச் சைலனே சரவணோற்பவனே. (௩௪)

வந்தனைபுரியேன் வழுத்திடேன்மணமார் மலருநின்கழலடி சாத்தே, னிந்தனைபுரிவே னெனவெனை நீக்கி நீணிலத்தெவரையும்புரப்பாய், மைந்தரையீன்றாட் கினிமையோர்மகப்பான் மறமொருமகக்கணுமுளதோ, சந்தனப்பொதும்பர் சூழ்திருத்தணிகைச் சைலனே சரவணோற்பவனே. (௩௫)

பானலந்தருசொற் பரத்தையர்மோகப் பரவையுட்படிந்தபான் மையினால், ஞானமுற்றுணர்ந்த நற்றவர்மகிழா நவையெலாந் திரண்டொரு வுருவ,மான தீவினையேன் றனைப்பரிந்தருள்வா யாசிலாமனத்தவர் வாழுந், தானமாளிகைக ளோங்கிடுதணிகைச் சைலனே சரவணோற்பவனே. (௩௬)

உனக்கெதிர் குறுகி யுன்சடக்கரமா முருவுளத்தியைபுற வாக்கிக், கனக்கநின்புகழைக் கனிந்துநின்றேத்தாக் கயமையேற்கருட்டிறங் காட்டி, மனக்கவலையுமீ மாற்றுநாளுளதோ மாநிலத்துவமை நேரின்றிய்ந், தனக்கிணை தானே யுயர்தருதணிகைச் சைலனே சரவணோற்பவனே. (௩௭)

காசினியுள்ளார் கழிவினைக்குள்ளார் கசடனென்றிகழ்ந்திடா தளிப்பாய், மாசுறுமனத்து மாதவர் வியக்கு மான்மகள்மகிழ்ந்தம ரிடத்தா, யேசிலாயர்கஞ் சரியையங்கிரியை யெழில்சிவயோகமா ஞானத், தாசர்மின்றியற்ற வளந்தருதணிகைச் சைலனே சரவணோற்பவனே,

பொங்குநீர்க்கடல்சூழ் புவிமுழுதொருகோல் போக்கிப்பொற் சிவிகைமீ திவர்ந்தார், மங்குறுநின்ற காட்சியேயல்லான் மாட்சிவேறின்றெண மனுநூ, றங்குநிங்கையராற் சாற்றியதோர்ந்துந் தவறிழைத்தேற்கருள்சாறு,சங்கமெஞ்ஞான்று மேத்துறுதணிகைச் சைலனேசரவணோற்பவனே. (௩௯)

இவலைத்தேன் றுளிக்குந் தெரியலார்கூந்தற் றெரிவையர்மயல்வலைச்சிக்கிக், கவலைகொள்மனத்தாற் கனிந்துனைத்தேற்குன் கழலிணை காட்டுநா ளுளதோ,அவலுறுபுனலினலருறையன்ன மங்கலார்க்குடைந்தனமென்று, தவமுறல்காட்டுந் தடங்கெழுதணிகைச் சைலனேசரவணோற்பவனே. (௪0)

பன்மலரணிந்துன் பதமிதமேத்தேன் பாவனைபுரிந்திடேன் பணியேன், வன்மனமுடையேன் வறுமைமிக்குடையேன் வளம்பெறவருள்வைகொல்பூங்கா, நன்மலர்மதுவுண் டளிமகிழ்தரலுன் னுமைமாமழதமுண் டுவப்போர், தன்மைபோன்றழியா வளம்பயில்தணிகைச் சைலனேசரவணோற்பவனே. (௪௧)

மையணிகண்டன் மைந்தனேவந்தென் மனத்துறுபருவரன்மாற்றி, யுய்யுமாறருளாதொழியின் வேறுதவி யுறுநர்நின்னில்வேறுளரோ, மெய்யணிநீற்றொ டொளிர்மணியணிந்து மெய்ம்மைதேர்நூல்விதி பயின்ற, சைவர்வாழ்தரும மடமமர்தணிகைச் சைலனே சரவணோற்பவனே. (௪௨)

அஞ்சனவிழியா ராசையையொழியாவறிவிலேனருந்தவர்க் காருஞ், செஞ்சரணுடையாய் திறலயிற்படையாய் செயிரறுந்தாள்வதென்றிசையாய், பஞ்சரத்திருந்து பயிலுறுங்கிள்ளை பாவையரின்சொலுக்குடைந்து, தஞ்சமிட்டவரைச் சூழ்தருந்தணிகைச் சைலனே சரவணோற்பவனே. (௪௩)

பரமுனையல்லால் வேறிலையென்னும் பற்றிலேனரந்தைதீர்த் தாய்ய, வரமெனக்கருளி யின்புகழ்க்கிழிவோ வளஞ்செறிபாற்கட லுய்

பண், அரவணைமேலா னலரவன்வானத் தமரர்க ளகன்புவி யடைந்து, சரணஞ்செய்தேத்திமனமகிழ்தணிகைச்சைலனேசரவணோற்பவனே.

விதிமுறைநவிலும் விரதமும்பூணேன் விரைமலர்க்கழலிட வேண்டேன், றுதிசெயநினையேன் றொல்வினைதுறந்த தூயர்தஞ் சொல்வழி நில்லேன், னதியொடுவிதுவை முடித்தவன்சுதனே நவமிலே னெனினுநான் வேண்டுந், ததியில்வந்தெனையாண் டருளுதிதணிகைச் சைலனே சரவணோற்பவனே. (௪௫)

இமையமால்வரைசெய் தவத்தினாலெவருமேத்திடுமகளென வுதித்த, உமையுவந்தளித்த முருகனேயுலகுக் கொருவனேயெனக்கருள் குகனே, யமைதருநூறோர் ஞாத்துணைப்பூசித் தனமளித்துண்டுவாழ்சைவ, சமயர்மந்திரஞ்சூழ் தருதிருத்தணிகைச் சைலனேசரவணோற்பவனே. (௪௬)

புரங்கண்மூன்றெரித்த புண்ணியன்விரும்பும் போதனேபோதமெற் கருள்வா, யரம்பையரோய்க்கு மங்கலார்புனலாட் டயருழிக்கலனுகுமுத்தும், இரைந்தெழுசங்கத் தரளமுங்கமல மீனுமித்திலங்களுமொதுக்குந், தரங்கமார்வாவி நிறைதருதணிகைச் சைலனே சரவணோற்பவனே. (௪௭)

திங்களங்குழவிச் செவ்விநேர்நுதலார் திறத்திருந்தழியிழி மனத்தேற், கிங்குளமிளகி யினிதெழுந்தருளி யேங்குறேலென்னுநா ளுளதோ, பங்கமுற்றெழுந்த பங்கயப்போதின் பரப்பெலாம்பருத்த நித்திலமீன், சங்கமார்வயல்சூழ் தருதிருத்தணிகைச் சைலனேசரவணோற்பவனே. (௪௮)

ஆதரம்பெருக வகமகிழ்ந்தலர்தூ யருமறைக்கரியநின் னடியைத்தீ தறவேத்துந் திறமிலேனுனது திருக்கணோக்கிலுய்ந் திடுவேன், மாதர்மென்கமல மலர்மகளன்னார் மணிநிலைநாற்றியதாமத், தாதலர்வாச நடமார்தணிகைச் சைலனே சரவணோற்பவனே. (௪௯)

மருமலரிட்டுன் மலர்க்கழலிறைஞ்சு மாண்புடையார்தமை மதித்துக், குருபரனென்றே குறித்திடுங்கொள்கை கொண்டிலேற் கிருவினைகுமைத்தாள், வருபவர்வேண்டு மனமுதலெவையும் வளம்பெறவழங்குறு வாழ்க்கைத், தருமநீங்கா மடங்கள்சூழ் தணிகைச் சைலனே சரவணோற்பவனே. (௫௦)

பதுமமென்மலர்த்தாள் பணிந்திடாவெனையும் பர்துகாத்தருள்வை போவடியார், சதமகனமரர் பணிதிருத்தணிகைச் சைலனேசரவணோ ற்பவனே. (ருஎ)

தினகரற்கெதிராம் பனியெனவடியார் தீயவெம்பவப்பிணி தீர்க் கும், அநகனேவடியே னகத்துயரொழித்தா ளருணன்வானெழுதரு முன்னம், புனல்படிந்தெழுந்து போதுகொய்துனது பூசைசெய்பூசுர ரோடுந், தனதனேர்குடிகள் வாழ்தருதணிகைச் சைலனேசரவணோற் பவனே. (ருஅ)

பலகலைபண்டை யாகம மநுநூல் பழகிப் பற்றின்றிப்பல் லுயி ரு, நலனுறநோக்கு மேலவர்நயக்கு நாதனேநாயினேற் கருள்கட், புல ஞ்செலற்கரிதா மாழிசூழ்புவியிற் பொங்குறுபுண்ணிய மியைந்த, தல ங்களுட்சிறந்த வளமிகுதணிகைச் சைலனேசரவணோற்பவனே,(ருகூ)

மூன்றெழுத்திலங்கு மூதறிவுடையார் மொழிதருமூலகா ரணமி ன்,கான்றருகமலக் கழனிழலதனிற் கடும்வினையேன்மன தென்று,மே ன்றுறவிருத்து நல்வரமருள்வா யேகனே யேதமே துமிலாச், சான்ற வருளத்தா மறைவளர் தணிகைச் சைலனேசரவணோற்பவனே. (சு0)

பாலமார்நயனப் பண்ணவற்கொருசொல் பகர்புகழ்ப்பானுவே ப டிறேன், சீலமார்புனலிற் றிகழ்பயப்பினிற்சேர் சிற்றுண வுக்கடைந் தேங்குங், கோலமாமயிலை போலுமேமாயைக் கொடுமையினகப்படாத ளிப்பாய்,தாலமீதெவர்க்கு மருடிருத்தணிகைச் சைலனே சரவணோற் பவனே. (சுக)

சூலியினிடப்பால் விளங்கவீற்றிருந்து தொல்புவியாவையும் ப டைப்பாள், பாலிருந்தவள்வாய் நகைதழைப்புறவேபற்பலவாட்டயர் பால, நாலினோடிரண்டா மெழுத்தின்மந்தணத்தை நாயினேற் கருள் செயலென்றோ, சாலியார்மருத நாடுசூழ்தணிகைச் சைலனே சரவ ணோற்பவனே, (சுஉ)

வாழ்வுறுமுலகர் வன்பிணிவாட்டி வளம்பெறக்கருதும்வா னமு தே,யூழ்வினையென்றனு டம்பினையுடற்று துவர்தரு டரினுட னுய்வே ன், ஆழ்கடலுடுத்த நிலமகள்தனம்போ லணிபரங்குன்றமோ டிரண் டாய், தாழ்விலாதுயர்ந்து வளர்ந்தெழுதணிகைச் சைலனேசரவணோ ற்பவனே. (சுந)

சேழ்த்திருமணியே யாடகவொளியே கேகயமீதிவர் தேவே, வாழ்த்துவோர்க்கனியே மாதவர்க்காக மாதங்கமுரித்தவன் சேயே, வீழ்த்துமென்வினைதீர்த் தின்பமேவிடவே விளக்கிவெம் மாயைசெய்சதியாற், றாழ்ந்திடாவகையொன் றருளுவைதணிகைச் சைலனே சரவணோற்பவனே. (கச)

பீழைசெயென்றன் பெரும்பிணிமாற்றிப் பெட்பினோடருள்செயெம்பெரும, மாழையுண்கண்ணார் யாகமூடுநவ வளர்பொழிற்கன்ணெறி செண்டு, வாழைவெள்வேழ மரிசனஞ்சாலி மாய்தரவாட்டிவானளவுந், தாழையங்கனிக ளுதிர்த்திடுந்தணிகைச் சைலனேசரவணோற்பவனே. (சுரு)

களிமதுச்சுடைந்து வழிநறுவுண்டு கான்றருங்காமர்செய் செச்சைமிளிர்மலர்த்தொடையார் வீரவாகுடைய வித்தகாவென்பிணிவிலக்காய், குளிர்சுரன்முழவுக் கிசைவுறமிதிக்குங் கூத்தியரிசைநடமொழியாத், தளிபலவோங்கித் திகழ்தருதணிகைச் சைலனே சரவணோற்பவனே. (சுசு)

முத்தியின்வழிதேர் முதிர்தவநாதர் முன்னுறுமூலகாரணமே, பத்திசெய்கில்லே னிழைத்தபாதகமோ பலவுளவெனினுமெற் புரப்பாய், அத்திமாவுரியை யாகமீப்போர்த்த வண்ணலார்க்குளமகிழ் வளிக்குஞ், சத்திவேல்வலமார் கரத்தனேதணிகைச் சைலனே சரவணோற்பவனே. (சுஎ)

உனக்குமுன்னடியார் தமக்குமெப்பொழுது முவக்குமோர்பணி பரிந்துஞற்று, வெனக்கும்வெம்பிணிசெய்தீவினையகற்றி யினிதருள் பெருக்குநா ளுளவோ, கனக்கநீருண்டகார்பொழிமழைபோற் கனிந்துநற்றிருப்புக ழிசைத்தோன், றனக்கருள்குருவாய் வந்தவாதணிகைச் சைலனேசரவணோற்பவனே. (சுஅ)

நிசிசரர்த்தடிந்த நிசிதமார்நெடுவேல் நித்தநீணைமிருஞ் சிலந்து, வசிபசுபவநோய் வாட்டிவாழ்விக்க வையகத்திருப்புன தென்றும், பசியுளேன்முகம்பார்த் திருந்துமங்கியர்போற் பராமுகஞ்செய்வதென் பகராய்ச், சசிதுவழ்மலர்த்தண் டுருமமார்தணிகைச் சைலனே சரவணோற்பவனே. (சுகூ)

நம்புமெய்யடியார்நற்றவப்பேறே நாயினேன்றனை யருட் கண்பார், பய்புநீர்ப்பெளவப் பரப்புமேல்கீழாம் பரிசகல்ண்டத் தமரர்க்,

கும்பமூடுதித்த குறுமுநிதன்னாற் குவலயக்கூனொழித் திட்ட,சம்புவி ன்குருவாய்விளங்குறுதணிகைச் சைலனேசரவணோற்பவனே. (எ0)

உன்னுயர்வாழ்க்கைக் கோயின்மாட்டொருகா லுற்றுளோர் கொடும்வினை யவர்பால்,மன்னிடா தளிக்கும் வள்ளனீயென்று மறைமறை வாயர்சொல் வாய்மை,யென்னிடத்திலையோ நினக்குளமிலையோ வென் றெனைப்புரப்பைகொன் மகவான், றன்னிடர்தவிர்த்தன் றளித்தவாத ணிகைச் சைலனே சரவணோற்பவனே. (எக)

உமையுகந்தருளு மொருபெருங்கனியே வும்பலபின் னுதித்தநற் றனியே, யமையுநன்மனத்தி னுன்றவர்க்கினியே யறிவிலேற்கருள லென்றினியே,இமையவரின்னோ யிறுதியென்றிருப்பா மிடமகன்றேங் கினைந்தழுமச், சமயம்வந்தவர்துன் பகற்றியதணிகைச் சைலனே சரவணோற்பவனே. (எஉ)

மத்தமாமதியான் மாண்புறுமுனதுமாமலர்க்கழன்மனத்தேந்தி, நித்தநின்றேத்து நேயனீள்வாய்மை நீத்தவெற்கருளுநா ளுளதோ, பத் தர்பண்பாகப்பாடிநின்றுடிப் பரகுவாய்ச்சொல் லெலாங்கவர்ந்த,தத் தைகணிதழும்பழகுறுதணிகைச் சைலனேசரவணோற்பவனே.(எங)

மயானமாடிடத்த மாசிலான்மகிழு மாண்புள்ளாய் நின்கழற்பூசை வயாவுகொண்டுஞற்றேன் வளங்கொளுன்கோயில் வாயில்வந்தொருவ லஞ்செய்யேன்,புயாசலாவென்றுபோற்றிடேனேத்தேன் புண்ணியம் புரிந்திடே னெனினுந், தயாளம்வைத்தாள்தா யனையனே தணிகைச் சைலனேசரவணோற்பவனே. (எச)

படவரவல்குற்பாவையராசைப் பண்பினுன்பதமலர்பணியா, இடருறுவேனையிரங்கலை யெனவே யிசைத்தருள்பெருக்கு நாளுளவோ, குடமுலைப்பணைத்தோட்குறத்தியர்புனத்திற் குருகரோம்பிடுங்கு ரலொலியாற், றடமுறுகடனேர் குறிச்சிசூழ்தணிகைச் சைலனே சரவ ணோற்பவனே. (எரு)

சாத்திரக்கடலைக் கடந்துசன்மார்க்கந் தருதிருச்சிந்தையோடுன் சீர்த், தோத்திரஞ் செய்யுந் துகளிலார்போலத் தொண்டியானுஞற்றி லேனெனினுங், காத்தெனைவாழ்வித்திடற்கு நீயல்லாற் கருதின்வே றெவருளர்கழறாய் தாத்திரியார்ந்தரேத்துறுதணிகைச் சைலனே சரவ ணோற்பவனே. (எசா)

வேய்தருவிழலன்வியந்திடுவேலோய் விரிகடலுடுத்தமேதினியிற்,
காய்பெரும்பிணியிற் கலங்கிடாதெனையுங் காத்தருள்புரியுநாளுளதோ
வாய்தருப்பொழின்மாட் டலரொழுக்கியதே மலிமதுபாய்தரவளர்ந்த,
சாய்தருஞ்சாலி மருதமார்தணிகைச் சைலனே சரவணோற்பவனே. ()

நட்புறுமனைவிமக்கடாய்தந்தை நகைதருநானிலவாழ்க்கை, துட்
பமா மென்றுநுண்ணறிவாளர் நூல்வழிநுவன்றதையோர்ந்தும், பெ
ட்புறுவேனும்பிரியமோடுன்சீர் பேசவும்வாய்க்குநாளென்றோ, தட்ப
மார்சோலை சார்தருதணிகைச் சைலனே சரவணோற்பவனே. (எஅ)

பொங்குவெம்பிணிசெய்போர்க்குடைந்தேங்கும் புல்லனேற்கரு
ள்புரிகுவையோ, திங்கடோய்சிகரித் திருப்பரங்குன்றந்திகழ்திருச்சீர
லைவாய்மிக், கங்கெழுதிருவா வினன்குடிதிருவே ரகமுயர்குன்றுதோறா
டல், தங்கியசோலைமலையனேதணிகைச் சைலனேசரவணோற்பவனே.

உலகெலாமீன்றவொருத்திநன்களித்த வொருவனேயுருவிலான்
படையாந், திலகவாணுதலார்திறத்தினின்மயங்கித் திகழுமுன்றிருவ
டிக் கடிமை, யிலகினின்றுனற்று திருந்தவிச்சிறியேற் கிரங்கிவந்தாளுநா
ளருளாய், சலசலோசனன்வந் தேத்துறுதணிகைச் சைலனேசரவ
ணோற்பவனே. (அ0)

மட்டறுக்கமலக் கோயிலானெழுத்தின் வண்மையோதொலைந்தி
லாத்தொன்று, தொட்டெனைத்தொடர்ந்த துன்பமோகொடிய துகட
ருமாயைசெய்சதியோ, துட்டனோர்கணமு முன்கழறுதியாத் துயரு
ளேற்குறுபிணிதொலைத்தாள், தட்டையாற்றத்தைகடிபுனத்தணிகை
ச்சைலனேசரவணோற்பவனே. (அக)

புண்படுமனத்துன்னறைவிரிமலர்த்தாள் போற்றிடேனெனினுங்
கண்பார்ப்பாய், பண்படுகுழலைப் பின்படுத்திய சொற்பாவையராடவ
ரோடும், விண்டொடுபொழில்வா யாடுழியவர்மெய் விழைகிழல்தோய்த
லாலலருஞ், சண்பகத்தருசூழ்ந்தொளிர்தருதணிகைச் சைலனேசர
வணோற்பவனே, (அஉ)

**து**ண்ணெனக்கிரியைத்துளைத்தவேற் கரனே துட்டனேற்கருள்
பரம்பரனே, பண்ணவரோடுங்குலிசவேற்படையான் பதிதுறந்திம்
பரிற்போந்து, வண்ணவாலயத்தினடைந்தமைநோக்கி லையந்தருவவ
ணடைந்தனபோற், றண்ணலர்பொதுளுங்காவளர்தணிகைச் சைல
னேசரவணோற்பவனே. (அங)

நன்மைசெய்கில்லேனருந்தவம்புரியே னுவிலுன்புகழெடுத்துரை யேன், புன்மைசெய்கிற்பேன்றீயனேனெனினும் பொறுத்தருள்புரித நீள்பொழில்வாய், மன்னியகொடிக ளெழுதருதோற்றம்வான்புனற் படிந்தவர்பிணிபோந், தன்மையையிகர்க்கும் பெருமைசால்தணிகைச் சைலனே சரவணேற்பவனே. (அச)

கயங்கெழுகமலமுகத்தியர் மயலாங் கயிற்றினாற்கட்டுண்டுநாளு ம், முயங்கிநெஞ்சழிந்துன்முண்டகத்தாளை முன்னிடேனெனினுமெ ன்றனையாள், புயங்கமேயணியாய்பூண்டவர்க் கொருசொற் பொருள் புலப்படப்புகன்றிடுமு, தயங்கெழுபுனிதபாநுவேதணிகைச் சைல னே சரவணேற்பவனே. (அரு)

தீஞ்சுவைப்பாகேதுய்ய செங்கரும்பே சீனியே செழித்தசெந்தே னே, பூஞ்சினைக்கனியே பொங்கும்வானமுதே போக்கொடுவரவில் புத்தேளே,வாஞ்சையோடேத்தாவெனையருட்கடல் சூழ் மாநிலத்தரச ரோடமரர், தாஞ்சிரத்தணிமா முடிமிடைதணிகைச் சைலனே சரவ ணேற்பவனே. (அசு)

அருளினிற்பிறத்திழைகினிற் புகழி னயலொருவரை யுயர்த்திடு வோர், பொருவினின்றனைமுன்னுவமைதொட்டெவர்க்கும் புகழ்படுத் துவரெனிலுன்சீர்ப், பெருமையான்பேசற்கெளிதலவெனினும் பிதற் றுமெற்கிரங்கியெங்கோவே,தருதியேலருளை யுய்குவன் றணிகைச் சை லனே சரவணேற்பவனே. (அஎ)

வீசுபூஞ்சந்தப் பொழில்வளர்பொதிய வியன்வரை விளங்குமாமு நிக்குத், தேசிகனெனவேவந்தருடந்த தேவனே சேவலங்கொடியாய், பாசமோடிருண்ட பெரும்பகடூர்ந்து படர்நமன் வருத்திடாதெனக் குத், தாசரணரவிந்த நீள்தணிகைச் சைலனே சரவணேற்பவனே.

உலகெலா நொடியிற்சூழ்மயிலிருக்க வொன்னலர்ச்செகுத்தவே லிருக்கக், கலிகெடக்காப்பா யெனும் பெயரிருக்கக் கருணைசேர்நிதிப் பெயரிருக்க, நிலமிசையடியேற்கிடர்செய்வெம்பிணியை நீக்கநீயினைந் திடாதுளத்துச், சலமுடையவர்போலிருந்தலென்றணிகைச் சைல னே சரவணேற்பவனே. (அகு)

திங்கள்சேர்சடையான்றிருவுளங்களிகூர் செல்வமேமெய்ம்மைவெளிப் படுளாய், பொங்கர்வான்றருவார்நாண்மலர்ப்பிரசம் புள்ளினமுண்

டெழுதோற்றம்; பொங்குறுசெல்வ மடைந்துழிப்புகழ்ந் துபுசித்திருந்தவர்பொருளுறுங்காற், றங்குறுதகல்வார் நிகர்திருந்தணிகைச் சைலனே சரவணோற்பவனே. (க0)

இகலியவசுர ருடலுயிர்துறக்க யிமயவர்க்கதிசயம் பிறக்கப், புகுமயில்பொறுத்தபுனிதனேயினிதுன் பூங்கழல்போற்றிடேனெனினும், பகலவற்குடைந்தபனியெனத்தீயேன் பழவினையொழித்தலுன் கடனே, சகலரும்போற்றக்கிளர்ந்தெழு தணிகைச் சைலனே சரவணோற்பவனே. (கக)

இகமுறவுனதுகழனிதமேத்தா விடும்பனேற்கருள்வழிதென்றிசைப்பாய், பதமுறுபத்தர்மனமலநறலாற் பாமகணிலவுறுபரிசால் விதவிதமாகச்சராசரம்விளைக்கும்வித்தகர்க்ககமகிழ்தரலாற், சதுமுகனிகர்க்குங்குடுமியந்தணிகைச் சைலனே சரவணோற்பவனே. (கஉ)

தையலோர்பாகன்றன்னகங்களிகூர் தயவெவ்வினைதவிர்த்தருள்வாய், வையகமுழுதுந்தன்வயிற்கொளலால் வண்ணிறப் பூமகளுறலான், மையணியென்றுமேவலான்மேனுண் மண்முழுதுண்டமாலெனலாஞ், சையமாமெவைக்குமரசெனுந்தணிகைச் சைலனே சரவணோற்பவனே. (கங)

பண்டருமறையிற்பகர்பரஞ்சுடரோ பரிவிலேனெனினுங்கண்பார்ப்பாய், கொண்டன்மீதுறலாலருமகச்செயலாற்கோதில்வாள்வயிரமேந்துறலால், வெண்புகர்க்கோட்டுவேழத்தாற்சசிபான் மேவலாற்கற்பகத்தருவார், தண்டலைக்கிறையை நிகர்தருதணிகைச் சைலனே சரவணோற்பவனே. (கச)

கூரியகொற்றவேற்கரத் தேந்துங் குமரநற்குணயிலேற் கருள்வாய், பாருளோர்ப்புரக்கும்பரிசினற்பரிந்து பணிந்திடார்க்கிடருறுத்தலால், வாரமும்பெறலாற் கவிஞர்வாழ்த்துதலால் வாகைகொண்டுலகெலாம்புரக்குந், தார்முடியரசர்தமைநிகர்தணிகைச் சைலனே சரவணோற்பவனே. (கரு)

உமையொருபாகனகமகிழ்சிறக்க வொளிர்பவ வென்றுயரொழிப்பாய், இமையவர்முதலாம் பகுப்பினருறலா லிருந்தவத் தினரிருந்திடலாற், சிமயம்விண்ணளவத்திகழ்தலாற் சுவணஞ் செறிதலாற் க

திர்வலம்வரலாற், றமணியக்குன்றங் தனைநிகர்தணிகைச் சைலனே சரவணோற்பவனே. (கூசு)

உம்பர்தந்துயர்தீர்த்தொழித்த வாவேழைக் குறுமிடரொழித்த லோர்பெரிதோ, நம்புமெய்யடியா ரும்பர்தங்குழுவு நாரியோர்பாகனு முறலாற்,பம்புநீரருவிபாய்தலர்ல்வேதம்'பரவ்லா லழிவிலா தறலாற், றம்பிரான் கயிலைமலைநிகர்தணிகைச் சைலனே சரவணோற்பவனே. ()

விடவராமிக்கொண் மேதினிமேலாய் விளங்குமெய்த்தெய்வமே மிகையே,படர்வினையுடையே னுனதடைக்கலமே பற்றினேன் பரிந் தெனைப்புரப்பாய்,அடவிவாழ்மான்க ணம்மவளிருக்கு மழகினைப்பார்ப்பமென்றெண்ணித், தடவரைச்சார லணுகுறு தணிகைச் சைலனே சரவணோற்பவனே. (கூஅ)

களித்துநெஞ்சுருகிக் கசிந்துமெய்பொடித்துக் கனிந்துனைத்துதிக்கவென்றருள்வாய்,அளிக்கஞல்கோதைக் கோதைய ரிளைஞ ரலர்ப்பொழிலகத்தயராட்டின், ஒளித்திடுகுதநீர் காண்கவென்றோடி யுயர்மரத்தடிதழுவுதலாற், றளிர்த்தலர்குராப்பா தவங்கெழு தணிகைச் சைலனே சரவணோற்பவனே. (கூகூ)

தங்கமால்வரை யென் றுயர்தனிக்குன்றந் தனுசெனச் சமைத்திட்ப்புரிந்த, திங்கள்சேர்சடிலத் தேவர் கோனிடம்வாழ் தேவியின்மடியினிற்றவழுங்,கொங்கவிழ்தொடையல் குலாவுநீள் புயத்துக் குழகனேயருள்செய்தென்மதுரைச், சங்கமுற்றிறைமை நடாத்தியதணிகைச் சைலனே சரவணோற்பவனே. (க00)

வாழிமூவிரண்டு முகமுமுந்நான்கு மலர் விழிக்கரந்திரண்டெழுதோள்,வாழிசெஞ்சூட்டு வாரணக்கொடியும் வலனுறுவேலுமாமயிலும், வாழிமானுதவ வருமனப்பெடையும் வானர சீன்றபெண்ணரசும்,வாழிகாங்கேய னடியருந்தணிகை வரையுநற் சரவணத்தடமும்.

தணிகாசலமாலை.

முற்றிற்று.

உ

வித்வான்

காஞ்சீபுரம் - சபாபதிமுதலியாரவர்களுடைய

மாணாக்கரிலொருவராகிய

புரசை - அஷ்டாவதானம் - சபாபதிமுதலியார்

இயற்றிய

## சிறப்புப்பாயிரம்.

நேரிசையாசிரியப்பா.

திங்களுங்கங்கையுஞ் - செஞ்சடைநிலவுறக்
கங்கணமாலிகை - கனமார்பிலங்க
முச்சுடர்ப்பிழம்பு - முக்கண்ணெனத்தக
நச்சாவணையி - னகுகதிரொளிப்பப்
பவளமேனியிற் - பாதிபசந்துறக்
கவளயானையைக் - கந்தனைநல்கித்
தனதியலெவர்க்குந் - தனியறிவுறுத்தும்
புனிதமாமூல - விலிங்கப்பொலிவாய்
வனைதருமோர்மறை - மாமுதல்வீற்றுறைந்
தலரோன்மாயோ - னரனெனக்குலவிய
முப்பெருந்தேவரு - முறைமுறைபழிச்சத்
தற்பரானந்தத் - தலையளிசுரந்து
காமக்கோட்டி - யம்மையுட்கனிந்து
சேமப்பேரற - மெல்லாந்திருத்துறக்
கருணைச்செங்கோல் - ஏகம்பவாணன்
பொருடரவுய்க்கும் - புகழ்தருவளத்த
பன்னிருபெயரா - னுலகெலாம்பரவ
மன்னியநகர - மாண்பமைகச்சியுட்
சினகரங்கொண்டு - திருக்குமரகோட்டத்
தெனவரும்போற்ற - வினிதிருந்தருளுஞ்
செவ்வேளடிமலர் - தினைப்பத்தனுது
நவ்வாப்பத்திமைச் - சார்புதுணைகொடு
தணிகைபரங்கிரி - சமரபுரிநெடும்

பணிமலைசெந்திற் - பதிகுமரகோட்ட
முதலியதிருப்படை - வீடுறைமுதல்வன்
துதியெனச்செந்தமிழ்ச் - சுவையுணர்புலமையோர்
கேட்டுழியகங்களி - சிறப்பக்கிளந்தன
னாட்டியபல்வகை - நயனுறுசெய்யுளான்
முன்னொருகாற்றிருத் - தணிகைமுருகவேள்
கன்னியரொடுமுளங் - களிப்பப்பதிற்றுப்
பத்துச்செய்யுண் - மாலைமுற்பகர்ந்து
குமரகோட்டக் - குருபதிதோத்திரம்
அமைவுறப்புகன்றது - மன்றியக்கடவுட்
கணிபொற்கவயமு - மருத்தியினியற்றிப்
பணிவொடுசாத்திய - பண்பினனிந்நாட்
டன்பெரும்பூசனைச் - சாதனைபலிப்பான்
செம்பொற்கூவிளப் - பைந்தளிர்த்தொடையல்
அன்பிடைவிடாமை - யழகுறப்புனைந்தனன்
மன்றமுத்தமிழுள் - வயங்குமுதலதா
மெனச்சொலப்பயிலு - மியற்கோட்டத்தினன்
வனக்கொடுங்குன்றரு - மருளுமாச்செறிந்த
திருவளம்பொதுளுஞ் - செய்வனைபலவு
மருவுமாகறலென - வழங்குநன்னாட்டினன்
ஊரக்கிழார்கோத் - திரமுயர்நதிகுல
தீரன்சேனு - பதிதேசிகனரும்
பெறலெனுக்கவவுறுப் - பெற்றிமையிதுவெனத்
திறனுறக்காண்பான் - திண்ணிதினுதித்த
கொங்கார்மலர்த்தார்க் - குவளைச்
சிங்காரவேல - னெனுஞ்சீரியோனே.

---

# சாற்றுக்கவிகள்.

சிதம்பரம் - தளவரிசை - ஆயுள்வேதபாஸ்கர

சுப்பிரமணியபண்டிதரவர்கள்.

இயற்றியது.

ஆசிரியவிருத்தம்.

சீர்மருவுமயனிந் திரன்குருபொய்யாமொழியர் தென்முனிவர்கீரரவ்வை
சிறுபுலவரருணகிரி நாதர்பகழிக்கூத்தர் சித்தரிற்கருவூரரிப்
பார்மருவுகுமரகுருவிவர்கள்பன்னிருவரைப் பன்னூதமிழாகரமினென்றே
பாடுதற் கடியெடுத் தக்கொடுத்தவர்கள்சொற் பாமாலைகளைநீங்குரு
தேர்மருவு வெட்சியோ டாரறுதோட்களி னிலங்கப் புனைந்திருந்து
மின்னுமுயர்பாமாலையணிவதற்கிச்சையைத் இவணவரிலாமைகண்டே
தார்மருவு சிங்கார வேலனெனும் நாவலன் றன்னறிவி னேடுசெலந்தே
சந்தமுறு பதிகமெல் லாம்பாட்டு வித்தவை தரித்தனன் கந்தவேளே.

வெண்பா,

சிங்கார வேலனெனுஞ் செந்தமிழ்வா ணன்கவியைப்
பொங்கார மாகப் புனைந்துகொண்டே - கொங்காருங்
குன்றுதொறுந் தோகைமிசைக் கூத்தாடி ஞனசுரை
வென்றுயர்தி ருத்தணிகை வேள்.

---

வித்வான்.

காஞ்சீபுரம் - சபாபதிமுதலியாரவர்கள்

குமாரர்.

கா - நாகலிங்கமுதலியார்

இயற்றியது.

நேரிசையாசிரியப்பா.

சீர்மலிந் துறையும் - பார்மகட னக்குச்
சேர்முகமென்னச் - சாருறுந் தொண்டை
நாட்டிலம்முகங் - காட்டியதிலதப்
பாட்டினையொத்து - வீட்டினைவெளிதில்
நச்சினவர்க்கருள் - கச்சிப்பதிவாழ்
விச்சையன்மிக்க - முச்சகம்போற்றுஞ்

சுரநதிகுலத்திற் - கொருநிதியானேன்
வரமலர்க்குவளைச் - சரமணிபுயத்தன்
பேழினுயர்த்த - மேழிப்பதாகையன்
ஆழிசூழ்புவி - தாழ்விலாதேத்தி
வேட்டலுறுமெயற் - கோட்டர்தனதெனக்
காட்டுமொக்றல் - நாட்டினனூரங்
கிழாரெனுங்கோத்திரம் - வழாதுறும்பாத்திரன்
ஒழுகுறுயகப்பே - றழகுறவேண்டி
மாறுபரணச் - சேனுபதியும்
வான்பாலாம்பரி - தானுந்தினம்பல
பண்ணியதவத்தின் - புண்ணியப்பயனை
மண்ணிலோருரு - நண்ணியதென்ன
உதித்துப்பலகலை - விதித்தபொருடனை
மதித்துமனதினிற் - பதித்திலக்கண
விலக்கியக்கடலை - யலக்கியமாகக்
கலக்கியுண்டுதென் - மலைக்குறுமுனிவய
யுறழுநாவலன் - பிறழுஞ்செல்வியின்
பெறலருமருளைத் - திறனுடனுற்றோன்
கற்பணிமேலாம் - பொற்பணியாக
வற்புடன்கொண்டு - தற்பணைபோன்ற
பூமிபுகழ்சிவ - காமியெம்மன்னை
காமியதலைவ - ஞமியல்சுகத்தி
னலமுழுதுற்ற - பலமிகுகாத்திரன்
வலமழுவேந்திச் - சலமதுவேணியி
னிறைதரக்கொண்ட - கறைமிடற்றண்ணலை
முறையுடனிதமுங் - குறைவறத்தொழுவோன்
பூதிசாதன - மாதியதாகுந்
தீதிலாச்சிவச்சின - மீதிற்கொண்டோன்
அத்தனடியரைச் - சித்தத்தழுத்தி
நித்தம்பணிபரி - சுத்தமனத்தன்
எண்கணனிறைஞ்சுஞ் - சண்முகன்றிருவடித்
தண்மலர்மறவா - வுண்மையன்பன்
பண்டிவனமுகைக் - கண்டுவேணுணங்
கொண்டுருவிலியாய் - விண்டனன்கொல்லோ

என்றிளமாதர் - நன்றுவமிக்கத்
துன்றியகட்டழ - கொன்றியவண்ணல்
நத்தியவிளமை - மித்தியங்கொண்டோன்
சத்தியவாய்மைப் - பத்தியைமறவான்
இரவலர்க்கீயும் - புரவலன்கவிஞர்
தரமறிந்துதவுந் - திரமுறுங்கொடையோன்
என்னுயிர்தனக்கொரு - மன்னுயிராகித்
துன்னுமென்கண்மணி - யன்னநண்பன்
சிங்காரவேலெனு - மங்களநாமந்
தங்கியவண்மைப் - புங்கவன்படியில்
மூவர்புகழு - முதல்வனருளிய
தேவர்சேனு - பதிமனமகிழ
மலரின்மாலை - சூட்டினஃது
புலருமென்னக் - கருதிப்பாவல
ராந்தேனினங்கள் - கூட்டுணப்பொருளாந்
தீந்தேன்சொரியச் - செம்பதமென்னுஞ்
சுகந்தம்பொலிவுறத் - தூயசொல்லாந்
தகுந்தமலரின் - பாவெனுமாலையைப்
பணிவேல்முருகன் - மகிழ்ந்தலமாந்
தணிகையதற்குஞ் - சமரபுரிக்கும்
வீட்டியல்வழியை - விளக்குங்குமர
கோட்டமதற்குங் - கூறுநாக
மலைக்கும்விராலி - மலைக்குந்திருப்பர
மலைக்குஞ்செந்தூர் - மாணகரதற்குங்
கழுகியுந்தடமுங் - கமுகமுஞ்செறி
பழநிமலைக்கும் - பரசுறுஞ்செவ்வேள்
ஊருமயிற்கு - மொளிருங்கரமுறுங்
கூர்வடிவேற்குங் - குளகமில்லா
தொவ்வொருபதிகந் - தோத்திரமாகச்
செவ்வையிற்புனைந்து - சீர்தரவச்சில்
நிலைபெறப்பதித்து - நேர்ந்தனன்மிகுபுகழ்
தலமதிலவனுஞ் - சேயொடுஞ்சுற்றமும்
ஓங்கலூழி - தோறும்
சங்கரன்பதமல - ரிறைஞ்சியேத்துதுமே.

---

ஆறை - கவி - அரங்கப்பிள்ளையவர்கள் குமாரர்

முத்தமிழ்க்கவி

## திருவேங்கிடப்பிள்ளை

இயற்றியது.

நேரிசையாசிரியப்பா.

திருவளர்தெய்வச் - சிறப்பெலாமமைந்து
மருவளர்கற்பக - மாலேவனைந்த
தேசுறுகுலிசச் - செழுமணிமுடிமீ
தீசன்றருவளை - யேவியமாறன்
றனதுசொற்றனதிற் - றுங்கிக்குழுமிக்
கனிவிற்கொண்டல் - கட்டியவேளான்
மரபுவிளங்க - மாநிலந்தழைக்கத்
தரந்தரமாநிரந் - தரந்தருகரவலன்
கச்சியேமுதலாக் - கழறிருபானுன்
குச்சிதக்கோட்டத் - துற்றவேழாவ
தியற்கோட்டத்த - னிருமைபயக்கும்
மயலொழித்தருஞ்சி - வாத்துவிதந்தெரி
யூரங்கிழாரென - வோங்கியகோத்திரப்
பேருடையான்றவப் - பேறுடைபுநிதன்
எண்பரிசனர்சூழ்ந் - தேத்துமைங்கதியின்
வெண்பரியூர்வோன் - மிளிர்செங்குவளைத்
தாரானோரா - தாரமிலானைச்
சீராநோக்குஞ் — செங்கமலக்கணன்
பெருமான்மியம்பல - பிறங்குஞ்சீர்த்தித்
திருமாகறலான் - றென்றமிழ்க்கடல்வரும்
ஆனுவமுதி - னரனருளியைகலைச்
சேனுபதியெனுங் - தேசிகன்முன்புரி
நற்றவப்புதல்வனுய் - ஞாலந்துதித்துக்
கற்றறிசிறப்புங் - காமனும்வெட்கும்
பெற்றியுந்தனதனிற் - பெருகியதனமும்
உற்றில்லறத்தி - னெழுகுமொழுக்கும்
இற்றெனப்புகலற் - கீடிலனுகிக்

கொற்றக்குமர - கோட்டந்தணிகை
வெற்றியார்பரங்கிரி - விராலிமலைமுதல்
பற்பலதலமரீஇப் - பணிந்தாங்காங்குச்
சொற்பொலிபதிகத் - தோத்திரப்பத்து
விற்பனருவந்து - விரிநீருலகில்
அற்பிற்றொடுத்த - வலங்கலிற்கவின்ச்
சாற்றினனினியார் - சாற்றுவதொன்ன
நாற்றிசைபோற்ற - நவின்றனன்பாவலர்க்
கிங்காரவேண்டுவ - நல்குஞ்
சிங்காரவேல - தேசிகமணியே.

---

தொண்டைமண்டலம் - துளுவவேளாளர் - ஏற்படுத்திய

இயற்றமிழ்ப் போதகசாலைப் பிரதம உபாத்தியாயர்.

## அப்பன் செட்டியார்

இயற்றியது.

கொங்காரவேற்கொன்றைத் தார்புனைபுஞ்செஞ்சடிலக் கோமான்மெய்
பங்கார வேற்பொருவுங் கண்ணிமைய மயிலளித்த பாலன் சூர [யின்
சங்கார வேலனிணை மலரடிக்குத் தமிழ்மாலை சாற்றி னானல்
சிங்கார வேலனெனுங் கச்சிநகர்க் குணநிதியாஞ் சீருளோனே.

---

வித்வான்

கா - சபாபதிமுதலியாரவர்களுடைய

மாணாக்கரிலொருவராகிய

## மயிலை - மா - சுப்பராயமுதலியார்

இயற்றியது.

கோத்திரத்தா னற்குணத்தாற் செல்வத்தாற் கல்வியினாற்குறைவிலாசற்
பாத்திரத்தா னுயர்கச்சிச் சிங்கார வேற்பெரியோன் பதித்துப்பத்துத்
தோத்திரப்பாவானுனையேதோத்திரித்தான தன்பெருமை தூக்கியேயெம்
மாத்திரமென் றியானுரைப்பேன் வானவர்சே னாபதியாய் வந்தவேளே.

வித்வான்

கா - சபாபதிமுதலியாரவர்கள்

கனிஷ்டகுமாரர்

கா - பாலசுப்பிரமணியமுதலியார்

இயற்றியது.

வெண்பா.

சாத்திரங்தேர் கச்சிச்சிங் காரவேல் சண்முகற்குத்
தாத்திரியி னேயமொடு தான்புனைந்த - தோத்திரப்பா
மாலையே மாலைமற்ற மாலையெலா மாலையுறு
மாலையெனச் செப்பலா மால்.

---

காஞ்சீபுரம் - பாரதப்பிரசங்கம்.

முத்துசாமிக்கவிராயர்

இயற்றியது.

வெண்பா.

வேலைப் பரித்திடுவெவ் வேளடிக் கேயிப்பா
மாலை புனைந்தான் மகிழ்வாகச் - சூலுற்றுச்
சங்கார வெற்றுதிரைத் தண்டடஞ்சேர் கச்சிநகர்ச்
சிங்கார வேற்றே சிகன்.

---

சாற்றுக்கவிகள்

முற்றிற்று.

முருகன்றுணை.

## சுப்பிரமணியர் தோத்திரப்பதிகங்கள்

# திருத்தணிகை.

காப்பு.

வெண்பா,

திங்கடோய் சென்னித் திருத்தணிகைச் செவ்வேட்குத்
துங்கப் பதிகமொன்று சொல்லவே - இங்கருளும்
போதகத்தன் பொன்னிறத்தன் போற்றும் புராரியருள்
போதகத்தன் பொன்மலர்த்தாட் போது.

சந்தவிருத்தம்.

அரியயனொ டமரர்பதி யவலமொடு கயிலையர
    னடியிணையி னரணடையவே
எரிவிழியி னவனுதவ வருமுவிரு முகமுடைய
    விளையனென விருநிலமுருக்
கரிமுகனொ டரிமுகனு மசுரர்குல விறையுமொளிர்
    சதிமுனி மதலைமுதலாந்
தரியலர்க டலைதுணிசெய் தருளொருவ வெனையருடி
    தணிகைமலை வளர்முருகனே. (௧)

உததிமிசை யெழுமிரவி யறுவரொரு புடையணுகு
    முறையின்முடி புனைகுமரநீள்
பதயுகள வனசமல ரனுதினமு மனதினினை
    பரிவுடைய ரெவரவரில்யான்
நிதமுமக மகிழ்வியம முறமலின மகலவரு
    ணிகழ்புவிவி ணுரகர்முதலாஞ்
சதமகனொ டரிபிரமர் பிணிதவிர வடுமைபுரி
    தணிகைமலை வளர்முருகனே. (௨)

உலகிலுள பொருணசையி னுறுதிகொளு மெனதுமன
    முனதுபய கமலமலரா
மிலகுபத மதனிலிறை பொழுதளவு நிலைபெறுத
    லிலதெனினு மெனையருளுவாய்

பலகலையி னரியபொருள் கொடுபரவு மடியரெதிர்
பயில்கிளிக ளகமகிழவே
தலமகிமை யுடனவர்கள் செவியுணமு தெனவுரைசெய்
தணிகைமலை வளர்முருகனே. (௩)

களவுகொலை சதிபொய்பெறு கசடர்கள மொருவிமிகு
கலையறிஞர் குழுவணுகியே
உளமகிழ்வு கொடுதமிழி னினதுபுகழ் பரசுமன
வுறுதிதனை யருள்புரிகுவாய்
கிளருமதி நதியறுகு நறையிதழி முடியரொடு
கிரிமகளுள் களிகொள்மதலாய்
தளவுகொடி மிசைமயில்க ளகவல்கழை மகளிர்கிசர்
தணிகைமலை வளர்முருகனே. (௪)

அடரலையி னுலைவுபெறு கவலையுறு மனமுளெனை
யறிவிலர்க ளவையணுகவே
மடமையுறு குணமிலியை யலகில்பவ மலினமற
வலியவருள் புரியநினைவாய்
குடமுனியி னிருசெவியு ளமுதொழுகி நிறைதனிகர்
குசலமொழி மொழிகுழகனே
தடமலரி னுறுதவள மணிசிதறி யெகினமிவர்
தணிகைமலை வளர்முருகனே. (௫)

உனதுபுகழ் துதிசெய்பழ வடியர்நம னுறைபதியு
ளொருபொழுது மணுகியுறையார்
எனமுனிவில் பெரியருரை பெருகவென திடைநிறுவி
லினிதுறும மொழிசாதமே
அனகனிட மமர்விமலை கலசமுலை முகநெருடி
யமுதொழுக நுகரழகனே
தனதவென மயினடன மிடவளிகள் சுருதிமுரல்
தணிகைமலை வளர்முருகனே. (௬)

மகபதியு மயனரியு மனமயலை யொருவியக
மகிழநிமி ருருவதனிலே
சகலவுயிர் சரமசர மடியினொரு புடையினமர்
தலையவர்க ளறியவருள்சீர்

புகலவரு மறிவிலெனை யறிவின்மிகு கவிஞரொடு
புலமையர்க ளருவரலவோ
தகமுகிலி னகடணவ வளர்துருமநிரையணிசெய்
தணிகைமலை வளர்முருகனே. (எ)

இவருமன வனிதையர்கள் வலையுள்படு மனதொருவி
யிலகுகதி தருகழலினே
நவமலரா யிடுதுதிசெய் தொழுகுமன வுறுதியொடு
நவைகொள்பவ மகலவருள்வாய்
புவனமுக டுடையபுவி யதிரவரு தகர்முதுகு
புறநெளிவு தரவுலவுவோய்
தவமுனிவ ருறைதலரி முழையினிலை பெறனிலவு
தணிகைமலை வளர்முருகனே. (அ)

பவளமலை மிசைபருதி யுதயமென வொளிர்மகுட
படிவமொடு மிளிர்குழைகளேர்
குவளைமலர் நிகர்பனிரு கருணைபொழி விழியொடுறு
குதலையமு தொழுகிமிகவே
துவளுமிடை மகளிரிரு புடைமருவ மயிலயிலென்
றுணைவிழியுள் மகிழவருவாய்
தவளமுறு களிறெனின கருடபதி பணிசமுக
தணிகைமலை வளர்முருகனே. (கூ)

அனுதினமு மிகுதுதிசெய் தனதுமன மகிழ்தமிழி
னளவில்கவி தனைமொழியவே
தனுகரண புவனமுத லிகபரமு மருளினனி
சகசநிலை தனையருளுவாய்
வனமகளு மகபதியின் மகளுமக முருகிமிக
மகிழ்சரசம் விளைகுருபரா
சனகர்முத லியமுனிவர் தொழுதருகின் மகிழ்தலுறு
தணிகைமலை வளர்முருகனே. (ம)

வேலுமயிலுந்துணை.

உ

முருகன்றுணை.

# திருப்போரூர்

காப்பு.

வெண்பா.

பூவடரத் தேன்முரலும் பூம்பொழில்சேர் போரூரை
நாவடரப் பாடவரு ணல்குமால் - மேவக்
களிறு னனத்தான் கருதாழி யீந்த
களிறு னனத்தான் கழல்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சீதநதிப் புனலாடித் துலங்கநீறு
சிறக்கவணிந் தக்கவடந் திகழச்சென்னி
மீதமரக் கரங்குவித்து மெய்விதிர்ப்ப
விழியருவி தரத்துதிசெய் நாத்தழும்பத்
தீதறநின் சினகரம்புக் கிறைஞ்சுவோர்கள்
தீவினைக ளுறுமெழுதிரா மியமாமன்றே
போதயன்மா லமரரொடு புவியோரேத்தப்
பூம்பொழில்சேர் போரிவளர் முருகவேளே. (௧)

கதிதருநின் றெழுத்தைக் கணப்போதூன்றிக்
கருதுவார் வினையெரியுட் படுகிடம்போற்
சிதைவுறுமென் றறிஞருரை தேர்ந்தெஞ்ஞான்றுஞ்
சிந்தித்துன் றிருப்புகழைச் சிறந்தவன்பால்
துதிசெயெனத் துயரணுக விதியுமுண்டோ
சொல்மறையா கமமுணராப் பொருளேமேனாள்
பொதியமலை முனிக்கருளுஞ் சிவக்கொழுந்தே
புண்ணியர்வாழ் போரிவளர் முருகவேளே. (௨)

முனிவுகொடு முழையுணிலைத் தமர்ந்தசிய
முன்னரொரு வேழமெதிர் நிற்பதுண்டோ
இனியுனது கழற்றுணையே துணையென்றென்று
மேழைதனை விணைப்பவரோய் வெருட்டலென்னே

பனிமலையர் துயரொழியப் பரிவால்வந்த
பழுமலை யிடைமுளைத்த பவளக்குன்றே
புனிதமது வுண்டளிகள் விருந்தையோம்பும்
பூந்தடஞ்சூழ் போரிவளர் முருகவேளே. (௩)

ஆதரவா லுனதடியா ரடியார்துகை
யணிந்துடலம் பணிந்தவர்தம் பதங்கள்போற்றிச்
சீதரனோ டயனமரர் பதிசேர்வாழ்வு
சிதைவுறினு மிவர்செல்வஞ் சிதையாவென்றே
ஓதுசதுர் வேதமுத லுணர்ந்தமேலோ
ருணாப்பரஃ தோர்ந்துமவ மோம்பாநின்றேன்
போதகலப் போக்கிடினும் பொறிநின்பாற்றே
பூதாஞ்சூழ் போரிவளர் முருகவேளே. (௪)

அண்டமுக டணவுவட மேருதன்னை
யலைப்பவருண் டாமெனினு மருள்சேருன்றன்
தொண்டர்தமக் கிடர்புரிவா ருண்டோதொன்னூ
டுதிசெய்தடி தொழுதயரும் வானோருள்ளங்
கொண்டகுறை தணந்தொழியக் கூர்வேலேந்துங்
கோதிலாக் குணக்குன்றே குடிலைதேராப்
புண்டரிகன் சிரம்புடைத்த சீயக்கன்றே
பொங்கெழில்சேர் போரிவளர் முருகவேளே. (௫)

சுழித்துலவு மருத்தினெதிர் மசகந்துன்னித்
துன்றுவதோ துகளறுநின் னடியார்க்கன்பு
கொழித்தருளுன் னருட்கிடனு மடியனேனைக்
கொடுவினைவந் தடரவடஞ் செய்வதென்னே
பழுத்ததமிழ்ப் புலவனிருட் குகையுண்மாழ்கிப்
பதறவிடர் தவிரவிரைந் தோடிக்காத்தும்
புழுத்தவுடற் பிணியுமொழித் தாண்டகோவே
புதுமைசெறி போரிவளர் முருகவேளே. (௬)

தந்தையொடு தாயுமிழந் தோர்சார்பின்றித்
தனிக்கொடிபோற் றுவண்டுவெளி தவித்தவன்றுட்
சிந்தையுறு திகைப்பறவே சேதாக்கன்றைச்
சேர்ந்தளித்த சுகத்திலெலனைத் திளைக்கச்செய்து

எந்தையே யினியிதற்கோர் கைம்மாறுண்டோ
வெல்லாமுன் செயலென்றே யெண்ணியுன்றாட்
புந்தியுறத் தொழுதலன்றிப் புகல்வேறென்னே
பூமகள்சேர் போரிவளர் முருகவேளே. (எ)

சூதமெனச் சூழுறும்வன் சூர்தடிந்த
சுடர்செய்வடி வேலிருக்கத் தொடர்செங்கையிற்
றீதறமற் றுளபடையு மிருக்கமேலாந்
திறலமைந்த சேவகப்பேர் திகழாநிற்கப்
பூதியுட னக்கரங்க ளாறிருக்கப்
புகழ்கருணா நிதிப்பெயர்கொள் பெரியோயுன்காற்
போதரண்சா ரடியனிடர்க் கிடரேன்செய்யாய்
புகல்வைதிருப் போரிவளர் முருகவேளே. (அ)

விரிகடல்சூழ் புவியுளூறு மாய்தன்சேய்மேல்
விழைவிகந்து விகற்பமுற லூழதேனும்
பரிவொடுமோ லயமணுகிச் சூழ்ந்துவாசப்
பங்கயப்போ தனையமுக மாறுங்கண்டு
தரிசித்தேற் கிருவினைக்கிங் கிடமுமுண்டோ
தாட்சியின்றி வினைக்குவிடை கொடுத்தற்கென்னே
புரியிதழிச் சடையர்மடி தவழ்குருந்தே
பூசுரர்வாழ் போரிவளர் முருகவேளே. (கூ)

அன்னைகுறிப் பறிந்துகுறங் கேறித்தந்தை
யரன்சடைவாழ் மதியயங்க வலருங்கஞ்சம்
என்னவிருங் கரமோச்சிச் சடைநீரள்ளி
யேற்றுவார் வாயினிடை யீன்றோர்வாயின்
மின்னவிரு நகைதழைப்ப வீசியாடும்
வித்துருமத் திளங்குழந்தா யெனையாட்கொள்வாய்
பொன்னுலகுக் கொருவிருந்தே புவிமருந்தே
போதமருள் போரிவளர் முருகவேளே. (க0)

வேலுமயிலுந்துணை.

உ

முருகன்றுணை.

# குமரகோட்டம்.

காப்பு

வெண்பா,

நாட்டமொரு மூன்றுடைய நம்பற் கருள்குமர
கோட்டற் கொருபதிகங் கூறவே - தேட்டமுறு
வாரணத்தின் ருளிகந்து வாழ்த்துமரிக் கன்றருளும்
வாரணத்தின் ருளுகந்து வாழ்த்து.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சீர்படைத்த மோலிபுனை சிரமொன்றேய்ந்து
திகழ்படைத்த வரதமொடு மபயங்காட்டி
நீர்படைத்த கண்டிகையும் வடமுமேந்தி
நிலைபடைத்த வுயிர்த்தொகுதி யுறைந்துவாழப்
பார்படைத்த சரவசரப் படைப்புமாற்றிப்
பணிபடைத்த முடிகிடந்த புடவிவாழக்
கூர்படைத்த வேற்கரன்வாழ் குமரகோட்டங்
குடிகொண்டா னடிகண்டு மிடிவிண்டேனே. (க)

விலையேறு பட்டுடுத்திப் பணிதுலக்கி
மெய்மினுக்கி நடைகுலுக்கி நடித்துக்காட்டிக்
கொலையேறு கண்வலைக்குட் படுத்துமர்தர்
கோலமதைக் கண்டுநசை கொள்ளுநாயேன்
வலையேறு கரத்தெயினர் மானினேட்ட
மதுவேட்டு வொருகோட்டு மதமாவேவி
மலையேறு குடிற்புகுந்து மணந்துகோட்டம்
வாழ்பரனைத் தொழுதன்பின் மூழ்கினேனே. (உ)

ஊன்வேட்டு மருள்காட்டிற் சிலையைப்பூட்டி
யுயிர்வாட்டு மெயினர்வலைக் குரங்கமென்ன
மானேட்டும் விழிமடவார் வலையுட்பட்டு
மயங்கிமனந் தியங்கிநிலை கலங்குந்தீயேன்

வானீட்டுந் துயரொழிய வடிவேற்கொண்டு
வந்தடருங் கொக்கைமயில் சேவலாக்குந்
தேனீட்டந் தருகடம்பார் குமரன்கோட்டஞ்
சேர்ந்தவன்றாட் சார்ந்தென்வினை பேர்ந்துய்ந்தேனே.

வாரடுத்த முலைமடவார் கலவிக்கள்ளை
வாய்மடுத்துக் கொங்கையணி குவட்டிலேறி
நீரடுத்த நிதம்பமெனுந் தடத்துள்வீழ்ந்து
நீந்தியலைந் தோய்ந்துழலும் பித்தனென்றே
பேரடுத்த பிறவியெடுத் துழலுந்தீயேன்
பிடிக்கொடியும் பிணைக்கொடியும் படரவாய்ந்து
சீரடுத்த பதிக்குமர கோட்டமேயோன்
சிறந்தபதம் பணிந்துபவந் துறந்திட்டேனே. (சு)

காட்டிலடர் மூன்றுமத நால்வாய்வீழக்
கல்லுநில வறைக்கெதிராம் பார்வையாப்போல்
நாட்டிலட ராடவரை வயப்படுத்த
நகிலமெதிர் காட்டிமய லூட்டுமாதர்
வீட்டினடர் தலைக்கதியென் றெண்ணுந்தீயேன்
வேதனருஞ் சிறைதவிர்த்தாள் விசாகனெந்தை
கோட்டினடர் கிரிக்கிளைய கோட்டற்கன்பு
கொழித்திட்டே னென்வினையை யொழித்திட்டேனே.

மையிருக்கும் விழிமடவா ராசையோங்க
மதன்கலைதேர்ந் தணுகிமயல் பூண்டுநாளும்
பொய்யிருக்கும் நொடிகொலைகட் களவுயேனை
புரிந்துதவ மெலிந்துவினை செறிந்ததீயேன்
வையிருக்கும் நீடயிலா லுததிமாவை
வனாயயிப வளிமுகனைக் குறளைச்சாடி
ஐயிருக்குஞ் சிகரியுயர் குமரன்கோட்ட
மார்ந்தவேட் டொழுதுபவப் பிணிதீர்ந்தேனே. (சா)

கொலைபழுத்த வன்னெஞ்சப் பரத்தைமாதர்
கூந்தலைச்செல் லென்றும்விழி குவளையென்றும்
முலைபழுத்த செப்பென்றுங் தளிர்மெய்யென்று
முழுமதிய முகயென்று யாம்பல்வாயென்

றலைபழுத்த் வமுதுநிகர் சொல்லென்றன்னோ
ரடிபணிந்து விழைந்தவர்பின் செல்லுந் தீயேன்
மலைபழுத்த விமலையருள் குமரன் கோட்டம்
வாய்த்தவனைத் தொழுதுவினை மாய்த்திட்டேனே (எ)

ஆட்டியங்கா வருஞ்சுரத்து ளமர்பேய்த்தேரை
யறனசையி னடைந்துழலு முழைக்கணம்போல்
வாட்டியங்கும் விழிமடவார் வாய்நீர்மாந்தி
மதியிலராய்த் திரிபவரைப் புகழுந்தீயேன்
நாட்டியங்க விண்ணுரகர் புவிதயங்க
நாலிரண்டு நாகமலை பணிமயங்கக்
கோட்டியங்க வாடல்புரிந் தமர்வான்கோட்டக்
குன்றவனைத் தொழுதுநலந் துன்றினேனே (அ)

பெண்ணுசைக் கடல்கடக்கப் பொன்னிைசைப்
பெரும்புணையைப் பற்றியலைந்தோடியாடி
மண்ணுசைக் கரைகாணு தாழ்ந்து துன்பு
மல்களறினிடைத்தளைப்பட் டேங்குந் தியேன்
விண்ணுசைப் படுமகவான் மகளுங்கான
வேடர்மடப் பிடியுமிரு புடையமர்ந்து
கண்ணுசை கொளவமருங் குமரன்கோட்டக்
கந்தனடி தொழுதுபுலன் பந்தித்தேனே (கூ)

தாதடுத்த கோதைநிறை கோதைமாதர்
சார்ந்தணைசிற் றின்பேபே ரின்பாமென்று
கோதடுத்த புன்னெறியின் மனனைப்போக்கிக்
குவலயத்துட் கயவனெனத் திரியுந்தீயேன்
மாதடுத்த பாகனுக்கு மறையுங்காணு
மந்தணத்தைப் புகன்றுபுவி காக்குமன்பால்
போதடுத்த பொழிற்குமர கோட்டவேளைப்
போற்றியென்கான் முளைதழைக்கப்போற்றினேனே ()

வேலுமயிலுந் துணை

உ

முருகன்றுணை.

# நாகமலை

காப்பு

வெண்பா

பூகமலைத் தோங்குவரைப் பொன்னுலகைப் பங்கரிடு
நாகமலைக்கோர்பதிக நாட்டவே - மோகசிலைத்
தும்பிமுகத் தம்படரத் தூண்டுமதன் றந்தைமகிழ்
தும்பிமுகற் கன்படரத்துன்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பூரண னுதற்கட் புலிங்கமாய்த்தோன்றிப் பூந்தடஞ் செறிந்தொருசே
நாரணன் மாவா னுன்முக னமரர் நடுக்கம தறப்பகை முடிக்கித்[யாய்
தாரணிதவப்பே றெனவடைந்தோங்குஞ் சரவண பவனமரிடந்தான்
வாரணம் பிடியைக் குளகுவா யருத்தி வாழுறு நாகமா மலையே (௧)

பொய்யுறுமாயப் புணர்ப்பினலண்டபுவனமும்புதையவெண்டிசையும்
மெய்யுறக்கவடுஞ் சாகையும் வளாரு மேயவாய்ந்தாம்பிரவுருக்கொள்
வெய்யசூருயிரும்வேலையுங்குடிக்கும்வேலுடைக்கடவுள்வாழிடந்தான்
பையுறு முரகப் பதிக்கிறை யிறைஞ்சிப் பையுடீர் நாகமாமலையே(௨)

புவியிடை முனிவனுஞற்றியமகத்திற்போந்துருத்தெழுந்தபேர்வருடை
தவிப்புறவுலகையுடற்றுதற்றவிர்த்தாட்சத்திவேற்கரனம ரிடந்தான்
கவிக்குலமறியா மரன்மிசைக்குயில்கள் கான்செய வளிசுதி முரல்வ
செவிப்புலத்தமரர் கேட்டுளமகிழ்வாற் றெருட்டுறு நாகமாமலையே ()

அடம்படுமடங்க லன்னனகட்டுளகப்படும்பூதர்போந்தகல்வான்
இடப்படப் புரிந்தவ்வசுரனைவாட்டி யென்னையாட்குகன மரிடந்தான்
குடம்படுசெருத்தற்சுரபிதன் றீம்பாற்குயவரிக்குருளைவாய்மடுத்தூண்
டுடன்படுமெயினர் மகாருடனு வுவப்புறு நாகமாமலையே (௪)

கொலைசெறிந்திருண்ட கோலமாரவுணக் குழுவொடுந்தாருகற்றடிந்து
மலைசெறிகவடு மொழித்துவிண்காத்த மலைமகள்மதலைவாழிடந்தான்

சிலைசெறி திண்டோட் புளினர்தமடவார் சேண்படர்நவ்வயினூர்ந்த
இலைசெறிதருவினலர்பறித்தளகமீட்டுறு நாகமாமலையே (௫)

பராபரன்வேண்டப்பங்கயாசனனைப் படுத்தியதளைதறித்தலனும்
முராரியுமகந்தை தீர்தரப்புரிந்தமூவிரு முகனமரிடந்தான்
கிராதர்தமிளைஞ றெறிகவண்சிலையைக்கிரிசரப்போதகமேந்தி
விராவுறவெதிர்நின் றேச்சிமிக்கவரை வேட்புறுநாகமாமலையே (௬)

உண்ணிறை யிருளிற்கிரணைக்கொடும்போமோங்கனோர்கண முயிர்மடிய
பண்ணிறைமதுப்பூந் தொடையலாரயில்சேர்பன்னிருகரனமரிடந்தா
கண்ணிறைந்தலரும்வேங்கைமாமலணாக்கானவர்தரப்பெறுமமரர் (ன்
விண்ணிறைதருவினலரளித் தவரை வியக்குறு நாகமாமலையே (௭)

மழைநிகரோதி நங்கைகையிழந்து மனந்தளர்ந்தகமெலிந்தயர(ந்தான்
விழைவொடும்விரைவினடைந்துகையீந்தமெலவர்க்கிறைவன்வாழிட
உழையடர்வனஞ்சேர்தருவழிவாறோ ருலவிவந் தடர்ந்துடனிவர்தல்
கழையிடைவிளையாட்டயர்வுறுங்குழுவின்காட்சிசேர்நாகமாமலையே.

வெடிகுரற்கடுஞ்சொல்வேட்டுவர்மருளவிண்படர்வேங்கையாய்நின்று
பிடியிடைக்கொடிமான்வள்ளியைமணந்தபிஞ்சகன்மகனமரிடந்தான்
பிடியொடுகன்றுந்தற்புடைசூழப்பெருமதவேழமங்குலவல்
இடிமுழங்கெழிலி யிடைவிடாதொழுகியியங்கனோர்நாகமாமலையே(௯)

வானுலாந்தேவர்குடிப்புகவளித்துவலியசூர்குடிக்களைகளைந்து
தேனுலாந்தீஞ்சொற்பிடிதனை மணந்ததேவர்சேனாபதிக்கிடந்தான்
மீனுலாந்துருமத் தடைபகன்மதியை விழையிறுலெனக்குரங் கேறிக்
கானுலாம் வேழமருப்பினுற்கிண்டிக்களித்திடுநாகமாமலையே (௰)

வேலுமயிலுந்துணை

---

உ

முருகன்றுணை

# விராலிமலை.

காப்பு

வெண்பா

விந்தமதி தோயும் விராலிமலை மேல்வாழுங்
கந்தன் பதிகங் கழறவே - முந்தொருகால்
ஓங்கலிடை வந்தவர னுள்ளமகிழ் கொள்ளுமத
ஓங்கலிரு செஞ்சரணை யுன்.

அறுசீர்க்கழிநெடில்ஆசிரியவிருத்தம்.

முண்டக மலர்ந்த தன்ன மூவிரு முகனென் றேத்தித்
தொண்டரைக் கூவுஞ் சேவற் றுவசமார் கரத்தனெந்தை
விண்டரை யேத்த வைகும் விராலிமா மலையுண் மேய
அண்டரைக் காத்த வேற்கை யண்ணலைப் பணிந்து வாழ்வாம்.

சீர்த்திசேர் திருவின் மிக்க சேய்குகன் செட்டி செவ்வேள்
கார்த்திகை யறுவர் தீம்பாற் களித்துணுங் குழகன் சூரை
வேர்த்துடன் றடிந்த வீரன் விராலிமா மலையுண் மேய
பார்த்தவர்க் கன்புள் ளூறும் பன்னிரு கரனைத் தாழ்வாம். (உ)

வேதனு நெடிய மாலும் விண்ணவர் கோவும் வேண்ட
மூதுல களக்கு நோன்றாள் முருகன்முக் குணங் கடிந்தோன்
மேதினிக் குவகை பூப்ப விராலிமா மலையுண் மேய
நாதனைக் குமர வேளை நவின்றுநம் வினையை வெல்வாம். (௩)

காருளார் கண்டற் கோர்சொற் கழறிய கருணை யாளன்
வாருளார் முலைப்பூங் கொம்பர் வள்ளிதன் கேள்வன் மிக்கச்
சீருளார் சிமையம் வாய்ந்த விராலிமா மலையுண் மேய
சூருளா ருரம் படுத்த தோன்றலைத் துதித்து வாழ்வாம். (௪)

ஆதரம் பெருகு முள்ளந் தான்றவர்க் கருளும் வள்ளல்
சீதரன் மருகன் றூயன் றெய்வமாப் பிடிம ணந்தோன்
மீதுய ருலகைச் சூழ்போம் விராலிமா மலையுண் மேய
பூதரந் தகர்த்த வேலோன் பூங்கழற் கன்பு செய்வாம் (௫)

காரியப் பொருளான் முந்துங் காரணங் காட்டுமா போல்
ஆரிய னுய ரற்கு மறுமுகம் பெற்ற மேலோன்
வேரியம் பாயுஞ் சோலை விராலிமா மலையுண் மேய
நாரியம் பாகன் மைந்த னறையிழி மறைத்தாட் டாழ்வாம். (சு)

காதிவெஞ் சூரை வாட்டுங் கதிர்செய்வேற் கரத்தா ளாளன்
ஊதியு மென்ன வன்பா லுகந்துமை யோம்புஞ் செல்வன்
வேதியர் முழக்க மாரு விராலிமா மலையுண் மேய
ஆதியு மனுதி யாய வறுமுக னடியுட் கொள்வாம். (எ)

காத்திரம் படைத்த மாவைக் கடலினைக் கலக்குங் கந்தன்
தாத்திரி முதலா யுள்ள சராசர மழித்துங் காப்போன்
வேத்திரப் படையர் சூழும் விராலிமா மலையுண் மேய
கோத்திரத் திறைவ னுய குமரனைத் தொண்டு செய்வாம். (அ)

மண்ணொடு புனலு மிக்க வளியழன் வெளியு மாகி
எண்ணுறும் புலன் குணங்க ளெவற்றினுஞ் செறிந்து நின்று
விண்ணிறை சுடராய் வந்த விராலிமா மலையுண் மேய
பண்ணவன் பரமன் மைந்தன் பதமலர் பணிந்துய் வாமால் (கூ)

உள்ளுவா ருள்ளத் தோங்கு மொப்பிலாக் குமர மூர்த்தி
கள்ளமார் வேடம் பூண்டு கன்னியைக் கவர்ந்த கள்வன்
வெள்ளமா ரருவி தாழும் விராலிமா மலையுண் மேய
கள்ளுலாங் கடம்பு வேய்ந்த கந்தனைத் தொழுது வாழ்வாம். ()

வேலுமயிலுந் துணை.

---

உ

முருகன்றுணை.

# திருப்பரங்கிரி.

காப்பு

வெண்பா.

சீரடாரத் தேங்குபுகழ்த் திண்சேர் பரங்கிரிவேட்
கோடாரப் பாடவெனக் கிங்கருளும் - வாரடரும்
அத்திமுகத் தாலினுறங் காயனிளஞ் சோதரிசேய்
அத்திமுகத் தண்ண லடி.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கொண்டல்மே னியனுங் குலிசமார் கரனுங்
கோகன கத்துறை யயனுந்
தொண்டுசெய் தென்று நீங்கிடா துவந்து
துதிபுரி குமரன்வாழ் கோயில்
மண்டிருண் முழையார் வாளராப் பணஞ்சேர்
மணிக்கர மேந்திநீண் மந்தி
தண்டலைப் புடைசார்ந் துற்கையென் றெறியுஞ்
சாரல்சேர் திருப்பரங் கிரியே. (க)

பாட்டளி தனது பேட்டொடு முரன்று
பசியநாண் முகையவிழ் நறவங்
கூட்டுணுங் கடப்பங் கண்ணிவேய்ந் திலங்குங்
குமரவேட் குடிகொளுங் கோயில்
தீட்டிடா வேற்கட் கொடிச்சிய ருணக்குந்
தினைக்கடர் கிளிக்கடி தீஞ்சொற்
கேட்டுநீண் சாரன் முளிசினைத் தருக்கள்
கிளைத்தெழுந் திருப்பரங் கிரியே. (உ)

பிள்ளைவெண் மதியின் கோட்டிறு ளுரிஞ்சப்
பிளிர்முகை யுள்ளுடைந் தலர்ந்து
கள்ளலர் கடுக்கைப் பரன்பரை யோடுங்
களித்திடுங் கந்தன்வாழ் கோயில்

புள்ளொழுப் புடைக்குங் கோட்டிரு லுடைந்து
புதுமது குதித்திட வெருண்ட
வெள்ளைவா ரணத்தின் குருளையங் கார்ந்து
வீரிடுந் திருப்பரங் கிரியே. (௩)

கட்டழ கதனி லிளமையிற் றிறத்திற்
கருணையி லயலொரு வருக்குச்
சுட்டிமுன் னுவமைப் படுத்திட வின்ற
சுடர்செய்வேற் கரனமர் கோயில்
நெட்டிலைப் பந்த ரிடுமரத் தெங்கி
னெகிழ்கனி கமுகுமா வருக்கை
மட்டறுக் கதலி கன்னலைச் சாடு
மருதமார் திருப்பரங் கிரியே. (௪)

கண்ணிறைந் தலர்ந்து பொலன்பொடி யுகுக்குங்
கான்றருங் கற்பக நீழல்
விண்ணர சளிக்கும் வேள்விநா யகனுள்
வேட்புறு மருகன்வாழ் கோயில்
வெண்ணிறத் தருவிச் சாரல்வாய்த் தவள
விண்ணொடு கருமுகில் விளங்கல்
கண்ணுதல் வாமத் திடையுமை யிருக்குங்
காட்சிசேர் திருப்பரங்கிரியே. (௫)

காய்ந்தழற் கதுவு மெயிற்றுடைப் பகுவாய்க்
கடைக்கடு வொழுக்குபாப் பணமால்
சாய்ந்திடப் பதைத்துண் ணீண்டளை தேடத்
தனிமயி லுகைப்பவன் கோயில்
தோய்ந்துவிண் ணுரிஞ்சுங் குடுமியஞ் சாரற்
சூழ்முகிற் குலமென வேழம்
பாய்ந்தெதிர் பொருதப் புகுந்திடா மையிற்பின்
படர்ந்திடுந் திருப்பரங் கிரியே. (௬)

வெஞ்சினத் தவுணக் குழுமுழு தாவி
வேரறக் களைந்தட லொழிந்துத்
தஞ்சமென் றடைவார் தம்முயிர்க் குயிராய்த்
தழைந்தவேற் கரனமர் கோயில்

கஞ்சமா ரனத்தைப் புடைத்தெழு வாளை
கம்மக டோய்ந்திளங் கிள்ளை
கொஞ்சிருட் சோலைப் புகுந்துபுள் ளோச்சுங்
குளஞ்செறி திருப்பரங் கிரியே. (எ)

முருகுயிர்த் தெழுந்த நாண்மலர்ப் பிரச
மொய்த்தளி கோடியுண் டுவக்குந்
தெரியல்சூழ் கிடந்த பன்னிரு தடந்தோட்
செம்மல்சேர்ந் தரசுசெய் கோயில்
விரிதலைச் சிகரிப் பளிக்கறை முன்றின்
மென்றழை யுடுத்தகான் மடவார்
அரிகரி யுகுமுத் தேந்திசெங் கழங்காட்
டாடுறுந் திருப்பரங் கிரியே. (அ)

வட்டவாய்க் கமலத் திருபுடைக் குவளை
வாய்ந்திதழ் கூம்பிடா தலர்ந்து
மட்டருக் கிடக்கு மாண்பினோ ராறு
மாமுக னமர்ந்துவாழ் கோயில்
விட்டெறிந் தொளிகால் வாளரா மணியை
வேட்டுவ மகார்கரத் தேந்தித்
தட்டையூ டோச்சிக் கிளிகடிந் துவக்குஞ்
சாரல்சேர் திருப்பரங் கிரியே. (கூ)

ஆயிர கோடி யாதவ ரொருமித்
தரிப்பெருங் குன்றுறைந் தன்ன
பாயிரு ளொழிக்கும் படிவமார்ந் தணிசேர்
பசுஞ்சிகி யிவர்ந்துளான் கோயில்
தூயநீ ரருவி யொலித்துவீழ் சாரற்
றெல்லோா ளிராவணற் கிடைந்த
சேயுயர்ந் தெழுமால் வெள்ளியங் கிரியைச்
சிரித்தனேர் திருப்பரங் கிரியே. (ய)

வேலுமயிலுந்துணை.

---

உ

முருகன்றுணை.

# திருச்செந்தூர்.

காப்பு.

வெண்பா.

செந்திருவாழ் மாடமலி செந்திலுறை செவ்வேட்குச்
செந்தமிழா லோர்பதிகஞ் செப்பவே - முந்துபுகழ்ச்
சிந்தூரத் தானனையுஞ் செஞ்சடைசேர் செம்மலருள்
சிந்தூரத் தானனைத் தேர்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஏதமிலாச் செம்மணியோர் கோடி வேய்ந்த
வெழின்மடங்க லாசனத்து விருத்திச் செங்கேழ்
போதயன்மா லொடுககனம் புரக்குங் கோவும்
பூம்புனற்பொற் குடத்தேந்தி விதியி னாட்டிக்
காதமணங் கமழ்களபச் சாந்த ணிந்து
காம்பொடுசெம் மணிகுயின்ற மகுடஞ் சாத்தித்
தீதறநின் றேத்திட்வாழ் தூய வென்றன்
செயிர்தவிர்த்தாள் செந்தில்வளர் கந்த வேளே. (க)

ஓங்குசது ராகமஞ்சொல் விதியாற் பூசை
யுவந்துஞற்று முத்தமரு ளொருவ னல்லேன்
பாங்குபெறு நின்னின்பச் சுகப்பெ ருக்கைப்
பருகிநலந் துய்ப்பவரு ளொருவ னல்லேன்
தீங்குநிறை சிந்தையுள்ள சிதட னேனுன்
சின்மயமா மருட்குமுரித் தாவ தென்றோ
தேங்குமதுக் குடந்தாங்குந் தாலந் துன்றிச்
சேர்ந்தொளிருஞ் செந்தில்வளர் கந்த வேளே. (உ)

வஞ்சமிடை நெஞ்சனெனைக் கசட னேனை
மதியிலெனைப் பொய்நிறைந்த மனத்த னேனை
விஞ்சுகொலை கள்ளமுறுங் கள்ள னேனை
வீணில்மனம் புகுத்தியுழல் வெய்ய னேனைக்

கஞ்சமல ரனையவுன தருட்க ணோக்காற்
கடைக்கணித்தா ளாதுவிடிற் கதிவே றென்னே
செஞ்சடைசேர் சிற்பரனைத் தெருட்டு மேலோய்
செந்திருவாழ் செந்தில்வளர் கந்த வேளே. (௩)

பொங்குகதிர் மணிகொழிக்குங் கடலு டுத்த
பூமுழுதுஞ் சூழ்வரினு முழையுற்றாலுங்
கங்கைநதி யாடியில்லங் கடந்திட் டாலுங்
கதியடையார் குமரனரு ளல்லா லென்றே
துங்கமுள மேலவர்சொற் றேர்ந்துஞ் ஞாலத்
துயருழந்தேற் கருட்டுரியா தீத விண்டோய்
திங்களுடற் கூனிமிர்க்குஞ் சிகரி தோய்ந்த
சினகரஞ்சேர் செந்தில்வளர் கந்த வேளே. (௪)

பொய்யகன்ற மனத்தினராய்ப் பரிந்துன் பூசை
புரிந்திடுவார் வாய்மைசெறி யடிமைத் தொண்டும்
வெய்யவர்மாட் டணுகலுறா விருப்பு மிக்க
விரைமலரோன் றனைச்சிறையில் மேவ விட்ட
ஐயவெனக் கருள்புரிதற் குன்னை யன்றி
யாதரவே திதற்குமற்றோ ரைய முண்டோ
செய்யமுகங் களம்விழிவாய் காட்டும் பண்ணை
செறிந்திலங்குஞ் செந்தில்வளர் கந்த வேளே. (௫)

விரைசெறிநாண் மலர்பறித்துன் கழற்க ணிந்து
விழைந்தடிமைத் தொண்டுசெயா வீண னேனுந்
தரையிடைவா ழடியர்குழாத் தடைந்து துன்பு
தணந்துசுகந் துய்ப்பவெனைத் தடுத்தாட் கொள்வாய்
குரைகடல்முன் னட்குரைச் சார்ந்த பாவக்
கோளகலக் கோயில்முனந் தரள நாளுந்
திரையெறிநீண் கரஞ்சொரிந்திட் டுவத்தல் மானச்
சீரலைசேர் செந்தில்வளர் கந்த வேளே. (௬)

மிஞ்சுதவத் துன்னன்பர் பவநீள் வையம்
வெதுப்பவெழும் வடவையெதிர் சரகா மன்றோ
தஞ்சமுனைச் சேர்ந்தவெனைச் சஞ்ச லங்கள்
சார்ந்துதவ வச்சுறுத்தற் கேது வென்னோ

அஞ்சனமார் விழிக்குறமான் வள்ளி யுள்ளத்
தார்ந்தெழுந்த பேரன்பே யன்ன மன்னோர்
செஞ்சிலம்பின் பரல்முழக்காற் றிசைக்க யங்கள்
செவிதாழ்க்குஞ் செந்தில்வளர் கந்த வேளே. (எ)

பன்னுமியற் றமிழிலுன தரிய சீர்த்தி
பண்பினமைத் தோதுமருட் புலமை யென்பாற்
றுன்னவருட் புரிதிதந்தை தாயு மில்லாச்
சோதிதனைத் தந்தையெனக் கொண்ட மைந்த
மின்னொளிசேர் செஞ்சுடரோ தழற்பி ழம்பே
வீசுகதிர் மாணிக்கத் திரளே பூவார்
தென்னளியி னொலிகடல்வா யடைக்குஞ் சோலை
திகழ்தலுறுஞ் செந்தில்வளர் கந்த வேளே. (அ)

நேயமொடு முனையுள்ளத் துள்கா மாந்தர்
நீசரெனத் திரிந்துமற் காளா முன்னர்
பேயுருவாய்க் தவரிழியூன் பொதியு டம்பைப்
பெருங்கழுகு நாய்நரியுண் டிவக்கு மென்பர்
ஆபனையா யவையோர்ந்துன் னடிக்கா ளானே
னாதரித்தா ளசுரர்பதிக் கசனி யேறே
சேயுயரு மாடமிசைச் சிகிக்கு ழாங்கள்
செறிந்துலவுஞ் செந்தில்வளர் கந்த வேளே. (கூ)

சீரணவு நீறுடலம் விளங்கப் பூசேன்
செங்கைதனைக் குடந்தமிடேன் சென்னி தாழ்த்தேன்
ஏரணவுஞ் சீர்வாயாற் பாடி யாடே
னிறைஞ்சிடேன் விம்மியுடற் கம்பங் கொள்ளேன்
நீரணவ விழிபெருக்கேன் புளகம் போர்க்கே
னிலவுகழற் கன்புறுற்றே னெனினுங் காப்பாய்
கூரணவு மயிலேந்துங் கரத்தோய் தேவர்
குறைதீரச் செந்தில்வளர் கந்த வேளே. (௰)

வேலுமயிலுந்துணை.

உ

முருகன்றுணை.

# பழநி

காப்பு.

வெண்பா,

பழநிறைசெந் தேனொழுகிப் பைங்கூழ் வளர்க்கும்
பழநியிறைக் கோர்பதிகம் பண்பின் - கழறவுயர்
வேதண்ட மாமுகஞ்சேர் மெய்த்தவன்கை நீர்கவிழ்த்த
வேதண்ட மாமுகன் றுள் வேண்டு.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பொன்பூத்த மேருபல போந்த தன்னப்
பொங்கெழில்சேர் புரிசையுயர் தளியி னுப்பண்
மின்பூத்த மணித்தவிசின் மேய வாய்ந்து
மெல்லூசி தனைக்கவரும் காந்த மேய்ப்பக்
கொன்பூத்த வுலகினுள் வுயிர்க டத்தங்
கோளகலத் தடுத்தாளுங் குழக னெந்தை
தென்பூத்த பழனிமலைச் சித்தன் பாதஞ்
சேவித்தே னென்வினையைக் கோவித் தேனே. (க)

பூமணக்குந் தென்பொதியப் பொருப்பிற் போந்து
புவிமருவும் புண்ணியமெய்ப் புலவோர் தங்கள்
நாமணக்குஞ் செந்தமிழா லேசு வோர்க்கும்
நவையகற்றி நலனளிப்பா னெனும் வழக்கால்
பாமணக்கும் பதிகமிது பாட வேண்டிப்
பரிந்தெழுந்த வூக்கமனப் பித்த னேன்யான்
காமணக்குந் தென்பழநி மேயோற் கன்பு
காட்டினேன் றுயரனைத்து மோட்டினேனே. (உ)

யாற்றரிய பெரும்பிறவிக் கடலாழ்ந் தின்ப
மறிதிரையி னலைப்புண்டு காமப் பேயாங்
காற்றெறிப்பச் சுழலுண்டு கவலை யென்னுங்
கருங்கட லுற் றவசமுறுங் கசட னேன்யான்

ஊற்றிருந்து நறவொழுகுங் கடப்பந் தாரா
 னுருமருப்போங் கற்கிளையான் பழநியுள்ளான்
ஆற்றல்மிகும் வேற்றடக்கை யண்ணல் பாத
 மண்ணினே னலமனைத்து நண்ணினேனே. (ரு)

அலைகொழிக்குங் கடலுடுத்த வகில மியாவு
 மாணைசெல வாண்டவரு ளனந்தங் கோடி
கொலைகொழிக்கும் வாட்டடங்கண் மகளி ராசை
 கொண்டுநமற் காளாகுங் கொள்கை யோர்ந்து
கலைகொழிக்கு மனத்தினராய்ப் பிறவாச் செல்வங்
 கருதுவார்க் கிடரிழைக்குங் கசட னேன்யான்
மலைகொழிக்கும் பழநிவாழ்வை
 வாழ்த்தினேன் வினைப்பவநோய் வீழ்த்தி னேனே. (சா)

கறைசெறிந்த வன்னெஞ்சக் கள்ள மாதி
 கழன்றுதினை யளவேனும் வாய்மை யில்லாக்
குறைசெறிந்த மனத்தின ரா யயலோர்க் கென்றுங்
 கோளுரைக்குங் குண்டகரா நயக்குந் தீயேன்
மறைசெறிந்த பொருட்டேரா மலரோற் கன்னாள்
 மனந்தெருளத் தடுத்தாண்ட கருணை மூர்த்தி
நறைசெறிந்த பொழிற்பழநி நம்பர்க் கன்பு
 நாட்டினே னஞானத்தும் வீட்டி னேனே. (எ)

ஒன்னார்க ளுட்கவுடற் றிணிய வூனுண்
 டொதிபெருத்த தெனப்பொலிவுற் றிளமை வாய்ந்து
மின்னாரும் வியக்கமதன் கலைதேர்ந் தன்னோர்
 விரியல்குற் காட்படுவார்க் குவக்குந் தீயேன்
கொன்னாருங் குலிசமுடைக் குரிசிற் கொண்ட
 கோகிலக்கோ லந்தவிர்த்த குமர னெங்கோன்
தென்னாரும் பழநிமலைச் சேந்தற் கன்பு
 சேர்த்திட்டேன் பவப்பிணிவேர் பேர்த்திட்டேனே, (அ)

சுத்தநிறை செருத்தலுடை சுரபி சூழ்ந்துந்
 தும்புதழித் தோடுமிளங் கன்று போலச்
சித்தநிறை பேரன்பா லெனையாட் கொள்வான்
 சேர்ந்தடைந்து வினைவின்வரு கனவென் றெண்ணிப்

பித்தநிறை சித்தமொடுந் திரிந்து ஞாலப்
பெருமயக்காற் பேதுறல்சேர் படிற னேன்யான்
அத்தநிறை தென்பழநி யண்ணல் பாத
மடுத்திட்டேன் யாதனையைக் கெடுத்திட் டேனே, (எ)

புண்மேற்கொள் கறைநயக்கும் பறவை போலப்
போதமிற்புன் னெறிவியக்கும் பொறியைப் போக்கிக்
கண்மேற்கொள் கஞ்சமல ரளியி னின்பங்
காமுறுமா தவர்க்கிடர்செய் கசட னேன்யான்
விண்மேற்கொ ளமரர்சிறை குறைதீர்ந் துய்ய
மேவுறச்சென் றவர்கனவில் விளங்குமெய்யன்
திண்மேற்கொள் வேலேந்தும் பழநி வேளைச்
சிந்தித்தே னென்றுயரை நிந்தித் தேனே. (அ)

ஆங்காரத் திற்கிடனு மாண வத்தா
லளவிலாப் பிறவியெடுத் தீட்டு மென்றன்
தீங்காரத் தொகுத்துரைக்கத் தேரின் வாழ்நாட்
டூர்ந்திடினுந் தொலைவுறாத் துன்பு ளேன்யான்
ஓங்காரத் தெழுந்தபரஞ் சுடராய் நல்லோ
ருளக்கமல மெந்நாளுங் கோயில் கொள்வான்
பாங்காரச் சோலைசெறி பழநிக் கோவைப்
பணிந்திட்டேன் வினையனைத்துந் தணிந்திட்டேனே, (௯)

கூரோங்கு வேலெடுத்த குமர னன்றிக்
குணக்குறிசேர் மற்றையரைப் பரமென் றோர்ந்தும்
பாரோங்கு மானிடரைத் தேவ ரென்றும்
பண்ணவரைக் கடவுளென்று மிசைந்த வன்பால்
சீரோங்குஞ் செந்தமிழாற் கவிபுனைந்து
சிறந்தவர்போல் செப்பவரைச் சேருந் தீயேன்
ஏரோங்குந் தென்பழநி நாதற் கார்வ
மீட்டினே னென்னிடரை வாட்டி னேனே. (௧௦)

வேலுமயிலுந் துணை.

உ

முருகன்றுணை.

# மயிற்பதது

காப்பு

வெண்பா

செச்சையுலாஞ் சோலைசெறி செந்திவ்வே ளூர்ந்துலவும்
பச்சைமயின் மேற்பதிகம் பாடவே - இச்சையொடும்
ஆரணங்க ளேத்துமுத லாதாரவத்த னெனும்
வாரணத்தின் றுள்மனனே வாழ்த்து,

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நீரிடைக் குமிழி நிகரிழி யுடலை
நிலையெனு மறிவிலேற் கின்று
பேரிடர் தவிர்ப்பான் செந்தில்வாழ் வேளைப்
பெட்பொடுங் கொண்டிவணடைவாய்
பாரிடத் துறையு மன்பரா முகில்முன்
பசியநீள் தோகையை விரித்துக்
கூரிடுஞ் சதங்கை யொலித்திட நடித்துக்
குலாவுறு கலாபமா மயிலே, (க)

மத்திடு ததியிற் கவலைகொண் மனத்தால்
மாழ்குறு மதியிலேற் கருள்வான்
தத்துநீ ளலைசேர் செந்தில்வாழ் வேளைத்
தாங்கிநின் முதுகிடைக் கொணர்வாய்
அத்திசூழ் கிடக்கும் புடவியைத் தாங்கு
மனந்தனை நனந்தலை மீது
கொத்தியோர் மணியைச் சிதறிடத் தூக்கிக்
குலாவுறு கலாபமா மயிலே. (உ)

கிஞ்சுக மொழியார் மயலளற் றூன்றிக்
கிளர்வினைக் கேடனேன் றன்னை
அஞ்சலென் றருள்வான் செந்தில்வாழ் வேளை
யன்பொடுந் தாங்கிவந் தடைவாய்

செஞ்சர ணணியுங் கிண்கிணி யொலிப்பச்
சிறையடித் தலவியெண் டிசையார்
குஞ்சரம் வாய்விட் டலறிடக் கூவிக்
குலாவுறு கலாபமா மயிலே. (௩)

ஓதமா ரலையுட் டுரும்பென நாளு
முலைப்புறு முளத்தினேன் றன்னைத்
தீதறவளிப்பான் செந்தில்வாழ் வேளைத்
திகழ்தரக் கொணர்தியிவ் வேளைச்
சீதரன் முதலா மிமையவர் களிக்கத்
தீமைசே ருளத்தினர் துடிக்கக்
கோதறு மடியார் நடித்திடக் கூவிக்
குலாவுறு கலாபமா மயிலே. (௪)

சாலவெம் பிணியாற் றளர்ந்து நெஞ்சழியுந்
தமியனேற் கிங்குவந் தருள்வாய்
சீலமா மறைசேர் செந்தில்வாழ் வேளைச்
செறிதரச் சுவன்மிசைக் கொணர்வாய்
காலனைக் காலாற் காய்ந்துளா னணியுங்
கட்செவி கரந்திடக் கரிய
கோலமா லணையைச் சுருட்டிடச் சென்று
குலாவுறு கலாபமா மயிலே. (௫)

படியினு ளடியேன் பஞ்சினுஞ் சாலப்
படுமிட ரொழித்திட வென்றன்
குடிமுழு தாளுஞ் செந்தில்வாழ் வேளைக்
கோலநீட் புறத்தெடுத் தணைவாய்
அடியரின் வேடந் தாங்குபு கடுநே
ரளவுமுள் ளன்பிலா வஞ்சக்
கொடியரைத் துண்டப் படையினுற் கொத்திக்
குலாவுறு கலாபமா மயிலே. (௬)

காணலைப் புனலென் றெண்ணுவா ரவரிற்
கழியுல காசையை நயக்கும்
ஈனனேற் கருள்வான் செந்தில்வாழ் வேளை
யேர்செய்வெந் நிடையெடுத் தணைவாய்

தேனலர் கொன்றை யரன்கரஞ் செறிதீஞ்
செங்கனிக் கிமைப்பினிற் கமலக்
கோனரு ளுலகைச் சூழ்ந்துவந் துலவிக்
குலாவுறு கலாபமா மயிலே. (எ)

இருவினைக் கயிற்றி னூசலுற் றுழலு
மேழையே னரும்பவ மொழித்துக்
குருவென வருள்வான் செந்தில்வாழ் வேளைக்
கோலமார் துன்னிடைக் கொணர்வாய்
பெருமத வருடைச் சேவலுக் கெதிர்நின்
பெருமித மெடுத்துரைத் தயலார்
உருகெலாஞ் சமழ்ப்பத் தருக்கி நின்றாடிக்
குலாவுறு கலாபமா மயிலே. (அ)

மடமைவாய்த் தொழுகும் புலன்வழிப் புகுந்து
மதியிழந் தலைந்துழ லுயேன்
திடம்பெற வளிப்பான் செந்தில்வாழ் வேளைச்
சிறந்தநின் வெரிந்மிசைக் கொணர்வாய்
வடவரை குலுங்கக் கடனிலை கலங்க
வாகைசேர் தோகையைப் புடைத்துக்
குடங்கலுற் றெழுந்த மதிலுறுந் தனிமுன்
குலாவுறு கலாபமா மயிலே. (கூ)

அகமெலி வுறுவேற் கெதிரினிற் செந்தி
லண்ணலைக் கொணர்தியே னின்னைச்
சிகண்டிநற் றோகை சிகாவள மஞ்ஞை
சிகியணி பீலிகே தாரம்
நிகரறு மொகரங் கேகய மயூரம்
நிலவுநீ ணவிரமென் றேத்திக்
குகனிவர் பரியு மாவையென் றுரைப்பேன்
குலாவுறு கலாபமா மயிலே. (க0)

வேலுமயிலுந் துணை

---

உ

முருகன்றுணை.

# வேற்பத்து

காப்பு

வெண்பா,

செங்கமலச் செல்வியுறை செந்திலிறைச் செவ்வேளி
னங்கையமர் வேற்பதிக மன்பினொடு - மிங்கியம்பச்
சிற்பரன்சார் கூவிரத்திற் சேர்ந்தவச்சைக் காய்ந்திறுத்த
கற்பகவி நாயகன்றாட் காப்பு.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

துங்க மறையின் சிரத்திருந்து துகளற் றொளிரும் பழம்பொருளைச்
செங்கை யமர்ந்த நெல்லியினென் சிந்தை தெளியச் செய்திடுவாய்
பொங்கு மிருளிற் றமிழ்ப்புலவன் புலம்பக் கணத்தை வாட்டிவயற்
சங்க மொலிக்குஞ் செந்திலிறைத தடங்கைக் குடிகொள் வடிவேலே,

பொய்யார் வாழ்வை விரும்பியுடற் போற்றித் திரியுமறிவிலியை
மெய்யார் வாழ்விற் குன்றாத வீட்டி னெறியிற் சேர்த்திடுவாய்
மையார் கிரியின் மாயமிறை வஞ்சமகலைத் துளைத் தன்பின்
ஐயார் செந்தி லம்மான்ற னங்கைக் குடிகொள் வடிவேலே. (உ)

பொறியின் வழியிற் புந்திதனைப் புகுத்தி யகந்தை யடைவேற்கென்
அறிவுக் கறிவி னாடொன்றி யவிர்மெய்ப் பொருளை யறிவிப்பாய்
செறியுஞ் சென்னிச் சிங்கமுகன் றிறலைத் தெறுத்திட் டுயிருண்டு[லே.
பொறிக்குயணி செய் செந்திலிறைப் பொலன்கைக்குடிகொள் வடிவே

பாசத் தளையிற் பிணிப்புண்டு பன்னாள் வருந்தும் படிறனெனை
நாச னுருத்து நேடியுறு நலத்தி லிருத்தும் பதமளிப்பாய்
வீசும் வாட்கை யரக்கர்தமை வீட்டிக் கதிரின் மிகுமொளிகண்
கூசுஞ் சிகரிச் செந்திலிறைக் குடங்கைக் குடிகொள் வடிவேலே.(௪)

மாய்க்குங் காமக் கடலழுந்தி மாழ்கி மதியற் றுழன்றுசிறு
நாய்க்குங் கடையாய்க் கிடப்பேற்கு நல்வீட் டின்பச் சுகமளிப்பாய்
தாய்க்குஞ் சாலப் பரிவினெடுஞ் சயந்தன் கனவி லருளிநலம்
வாய்க்குஞ் செந்தி லமர்ந்தான்கை வாழ்ந்து குடிகொள் வடிவேலே()

தீராத் துயர்செய் சஞ்சிதத்தாற் றிகைப்புண் டயருந் தீயேனைப்
பேரா ஞானச் சுகவிளைவைப் பெருக்குந் துரியத் திடையிருத்தாய்
காரா ரவுணக் கடலுழக்கிக் ககனத் தரசுக் கரசளித்துப்
பாரார் செந்திற் பெருமான்கைப் பரிவிற் குடிகொள் வடிவேலே.(சு)

மாளாக் கவலை யுடனுழன்று வைய வாழ்வை மெய்யென்று
வாளாக் கிடந்திங் குழல்வேனை மாயா வாழ்வி னிடையிருத்தாய்
மீளாச் சிறையி லிருந்தவயன் மீளக் கருணை புரிந்தவனே
ஆளாச் செந்தி லமர்ந்தான்கை யார்ந்து குடிகொள் வடிவேலே. (எ)

ஏதஞ் செறிந்த வெனதுமனத் திருளை யொருவி யிணையில்லாப்
போதநிறைந்த வருண்மயமாம் புநித வெளியி லெனையிருத்தாய்
ஓதக் கடலி னீருறிஞ்சி யுறைந்த மாவைப் பிளந்தெறிந்து
நாதன் செந்திற் பெம்மான்கை நயந்து குடிகொள் வடிவேலே. (அ)

சூழும் பஞ்ச பூதத்தாற் றேன்று மெய்யி னிருட்குகையுள்
வாழு முயிரின் மலமகற்றி மாறு வின்பத் திடையழுத்தாய்
தாழுந் துதிக்கைத் தாருகனைத் தடிந்திட் டடவி முகிலகட்டைப்
போழுஞ் செந்தி லாதிபன்கைப் புகுந்து குடிகொள் வடிவேலே.(கூ)

தீங்கே புரியு மைவர்வயஞ் சிக்குண் டேங்கித் திரிதந்து
நீங்கா வவல மனமுடையே னிகழ்மெய்ஞ் ஞானம் பெறவளிப்பாய்
பாங்காய் மலைய முனிக்கருளிப் படியுள் மன்னு முயிர்க்கருள்வான்
பூங்கா வனங்கள் செறிசெந்திற் போந்த வேட்கை வடிவேலே, (௧0)

வேலுமயிலுந்துணை.

உ

முருகன்றுணை.

# அடைக்கலப்பத்து

காப்பு.

கட்டளைக்கலித்துறை.

செந்தா மரைத்தடஞ் சேர்தணி கேசன் றிருவடியின்
நந்தா வடைக்கலச் சொற்பதி கத்தை நவிலவன்பர்
சிந்தா குலந்தவிர்த் தாண்டற மாமுதற் செல்வமருள்
தந்தா வளமுகன் றுட்டா மரைத்துதி சாற்றுவனே.

வாதமும் பித்தமு மோய்ந்திட வையமும் வந்தடர
நாத மவிந்துயி ரேகுமப் போதுன் னளினமலர்ப்
பாத நினைக்கும் வரந்தா தணிகைப் பருப்பதநின்
ஆதர வேயடைந் தேனடி யேனுன் னடைக்கலமே. (க)

பொறியு மொடுங்கப் புலனு மடங்கப் புகலுடற்குள்
உறையு முயிர்ப்பகன் றேகுறும் போதென துள்ளநின்பாற்
செறிய வருட்டணி கேசவென் றேயென்றன் சிற்றறிவால்
அறையும் படியடைந் தேனடி யேனுன் னடைக்கலமே. (உ)

உருத்திருண் மேதிக் கடாவினைத் தூண்டி யுயிருணமன்
வருத்திட வந்தடர் போழ்திலுன் சீர்த்தியை வாழ்த்திடயான்
திருத்தணி காசல நீயெனக் கின்றருட் செய்வையெனும்
அருத்தியின் வந்தடைந் தேனடி யேனுன் னடைக்கலமே. (௩)

மாதரு மக்களுஞ் சுற்றமுஞ் சூழ்ந்தெதிர் வாயலற
வேதனை யாற்பிணிப் புண்டுழ னெஞ்சம் வெதும்பிமெய்ப்
போதுனைப் போற்ற வருளாய் தணிகைப் பொருப்பமிகு
மாதரங் கொண்டடைந் தேனடி யேனுன் னடைக்கலமே. (௪)

ஆயுளை மாய்த்திடு நோய்ப்பகை யாள ரவலமொடு
நோயிது தீர்வ திலையென் றிரிந்திட நொய்துறுமூச்
சோயும் பொழுதெனைக் காதணிகேசவென் றுன்னைநின்றே
ஆயென வந்தடைந் தேனடி யேனுன் னடைக்கலமே. (௫)

பொன்னினு மண்ணினு மங்கையரேனைப் போகத்தினு
மன்னிய நெஞ்ச மயராதப் போதுன் மலர்க்கழலை
உன்னிட வேண்டித் தணிகா சலவென வோர்ந் துண்மையாய்
அன்பொடும் வந்தடைந் தேனடி யேனுன் னடைக்கலமே. (௬)

நெஞ்சினுட் சற்றும் பயமேது மின்றி நிமலநின்றன்
கஞ்ச மலர்ப்பதங் கண்டென துள்ளங் கசிந்துருகித்
துஞ்சிடச் செய்தணி கேசவென் றேயுன் றுணையடிக்கே
அஞ்சலிசெய் தடைந் தேனடி யேனுன் னடைக்கலமே. (௭)

கற்பனை யானிறை வையகத் தார்வங் கழலவென்றுஞ்
சிற்பர னாக விளங்குந் திருத்தணி தேசிகநீ
முற்படத் தோன்றிவந் தாண்டிடு வாயென முன்னமேயான்
அற்பொடுஞ் சொல்லிவைத் தேனடி யேனுன் னடைக்கலமே. (௮)

ஊரொடு சுற்றமு மற்றுள பந்தமு மொத்திருந்த
சீரொடு மெய்ப்படி நீப்பலென் னுதென்றன் சிந்தையுன்றன்
பேரிடத் தாரப் பணிப்பாய் தணிகைப் பிஞ்ஞகவென்
றார்வ மொடுமடைந் தேனடி யேனுன் னடைக்கலமே. (௯)

பொய்யுடல்விட்டுயிர் போம்போதுன் னுமம் புகலவருள்
செய்தடி யேனின் றுட்டுணைக் கீழுறச் சேர்த்திடென
மையட ருந்தணி காசல மேவுநன்மாணிக்கமே
ஐய மறவறைந் தேனடி யேனுன் னடைக்கலமே. (௧௦)

முற்றிற்று.

முருகன்றுணை.

அறுபத்துமூவரி லொருவராகிய

திருக்குறிப்புத் தொண்ட நாயனார்

# நவரத்ந மாலா:

---

### விநாயகர் துதி.

திருக்கு றிப்பர் திருப்புகழ் செப்புவான்
பெருக்கு மும்மத வாரணப் பேருடை
செருக்கு மவ்வொருத் தன்றிருப் பூங்கழல்
இருக்கு மென்னெஞ் சகத்தினி லென்றுமே.

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

பூவேறு மகரந்தப் பொடியுதிர்க்கும் பூங்கொன்றை
    புனைந்த வேணிச்
சேவேறு சிவனடியார் மெய்த்தொண்டின் றிறந்தெரித்த
    சேக்கி ழார்நற்
பாவேறு புகழ்ப்பாண்டிப் பதிவாய்ந்த தமிழ்ச்சங்கப்
    பலகை மிக்கார்
நாவேறு மருட்டிறமை செறிபுலமை யிரட்டையரா
    னவைதீர்ந் துள்ளார். (க)

சீர்பூத்த திருவிளங்கு சிகரமுந் திருமதிலுஞ்
    செழும்பூங் காவுங்
கார்பூத்த தெனக்கவின்செய் திருக்காஞ்சி மான்மியஞ்சொல்
    கவிவ லோனுந்
தார்பூத்த வயிலேந்து சண்முகனார் சூர்தடிந்த
    சரிதந் தன்னைப்
பார்பூத்த பரிதியொளி போற்பலரு மறிதமிழாற்
    பாடி னோனும். (உ)

கச்சியின்முன் ஞளமலை மாவடிக்கீ ழொருலிங்கந்
கசிந்த வன்பால்
வைச்சரனைப் பூசித்து வளைத்தழும்பு முலைத்தழும்பும்
வாய்ப்ப மேவி
இச்சையுட னறமொருமுப் பானிரண்டு மினிதினெழுந்
திசைகொண் டாட
நச்சுமுயிர் நனிதழைப்ப வளர்த்தின்று மப்பூசை
நயந்தா ளன்றே. (௩)

அக்காஞ்சிப் பதியிடையவ் வருலிங்க மினிதேத்தி
யடைந்தார் பேறு
மிக்காகு மவைசிற்க விரிசிலையிற் றலைமோது
மேன்மை யோனுந்
திக்காடை யுடையார்தந் திருமேனி தனிற்சிலையைச்
செலுத்தி னோனும்
அக்காலத் தருமுத்தி யடைந்தனரென் றவர்நூலி
னறைந்த வன்றே. (௪)

அன்னவர்தந் திருக்குறிப்பு மவரடைந்த திருத்தலமு
மறியா ராகித்
துன்னுசெவிப் பரம்பரையொன் றேகருதி யெல்லோருந்
தொலைந்தா ரந்தோ
என்னவிவர் திருப்பணியை யெவ்வெவரு மேமாப்ப
விசைந்த வன்பால்
முன்னமவர் தமிலொருவர் திருத்தொண்டு கைக்கொள்வான்
முயன்று முன்னி. (௫)

திருக்குறிப்ப ரிவரென்ன வெம்போல்வா ரெளிதுணரச்
செய்வித் தன்றேற்
றிருக்குமிட மினிதினமைந் தெழின்முக்தித் தானமுன்று
மிடப மொன்று
திருக்குலவு சினகரங்கோ புரமதில்சண் டேசரொடு
தினஞ்செய் வோனுந்
தெருக்குலவு கடையாக விலைச்சிலை யிருப்பிடமுஞ்
சிறக்கச் செய்தான். (௬)

பிஞ்சகன்றன் றிருநீறு மக்கவட முதலணியாப்
பிறங்கு மெய்யான்
வஞ்சகமின் மனமுடையான் வழியர்வறு மைகளிரிய
வழங்கு கையான்
கிஞ்சுகமென் மொழிமடவார் மயல்கடந்தான் சான்றோர்பாற்
கேள்வி மிக்கான்
நெஞ்சகத்தி லெஞ்ஞான்று நிமலர்திருப் பணிதனதா
கேடு நீரான். (எ)

பொன்பூத்த வடமேரு திரண்டொருசார் பணைந்ததெனப்
பொருள்சேர்ந் துள்ளான்
தென்பூத்த தமிழ்வழங்கு தென்னாட் னிறத்தினிற்செந்
திருமா லொப்பான்
மின்பூத்த பணிவிளங்கு மணிமார்ப னனிதூயன்
மேன்மை யாகக்
கொன்பூத்த வுலகருரை கூறுகுப்பாஞ் செட்டியெனுங்
கோதி லோனே. (அ)

தாதேறு மலர்த்தடஞ்சூழ் திருக்குறிப்பர் திருப்பணிசெய்
தக்கோன் வாழி
மாதேறு மிடப்பாகன் மலர்க்கழலை மறவாத
மாந்தர் வாழி
காதேறு குழைமடவா ராடலொடு பாடலறாக்
காஞ்சி வாழி
போதேறு பொழில்புடைசூழ் சினகரம்வாழ் திருக்குறிப்பர்
புகழும் வாழி (௯)

நவரத்நமாலை முற்றுப்பெற்றது.

உ

முருகன் றுணை.

# திருத்தணிகை வெண்பாமாலை

காப்பு.

சீராரு மோங்கற் றிருத்தணிகைச் செவ்வேட்குப்
பாராரும் பாமாலைப் பாடுதற்கு-ஏராரு
மாதங்க மாமுகத்தே மானேந்தி யீன்றகுரு
மாதங்க மாமுகத்தே வாழ்த்து.

கந்தா கடம்பா கதிர்வேலா செங்கடம்பின்
அந்தா ரணிந்த வணிவாகா - நந்தாவெண்
பாவிலுனைப் பாடப் பணித்தருள் பாலித்தென்
நாவில்வந் தாளாய் நயந்து. (க)

வேலா தணிகைமலை வித்தகா மேருவில்லிப்
பாலாம் பணாயளித்த பாலனே - காலாய
மூச்சொருங்கே யொத்து மொழியுஞ் சடாக்கரத்தின்
பேச்சுரைக்கு மாறெனக்குப் பேசு. (உ)

முத்திநெறி தேரு மூதறிஞர் போலுனக்குப்
பத்திநெறி யுளூற்றுப் பான்மையனை - நித்தியமும்
போதலருங் காதணிகைப் போதப் பொருப்பினமர்
காதலருந் தோடுடையா கா. (௩)

தணிகைவளர் வாழ்வைச் சண்முகநற் றேவை
அணிகையினம் பூவெடுத் தர்ச்சித்துப் - பணியின்
திருக்கு மடமுமுள தீநெஞ்சே நல்லன்
பருக்குதவு வாழ்வுவரும் பார். (௪)

ஓலமிட்டே நின்புகழை யோதுமெனக் கியாவர்துணை
ஆலமிட்ட கண்ட னருள்சுதனே - சாலப்
பிழைத்தமக வேனுமனை பேதிக்கு மோகா
தழைக்குந் தணிகைநா தா. (௫)

என்னுளு மேன்மே லிடர்விளைக்கு மேழைநெஞ்சே
உன்னோ டுறுமுறவை யோர்ந்திலாய்-என்னுக்ந்
தஞ்சமெனத் தணிகைச் சண்முகனைச் சார்ந்திட்டேன்
அஞ்சலெனக் கென்னோ வறி. (௬)

வானவரா லேத்துமக வான்மகளை வேண்டித்
தானவரா னோர்மடியச் சாடுநினக்-கானவராம்
பத்தர்தமைப் பூசிக்கப் பாலிக்கிற் கைதொழுவேன்
நித்தந் தணிகையினி நின்று. (௭)

தித்திக்குந் தேனை தெவிட்டாத தெள்ளமுதை
எத்திக்குந் தானா யெழுஞ்சுடரை-முத்திதனக்
காதார மாந்தணிகை யண்ணலைநெஞ் சேயிப்
போதார வேத்தின் புறு. (௮)

வித்தகமாம் வேலால் வீர்வசு ரேசரைவென்
றெத்திசையும் வெற்றிபுரிந் தேர்தணிகை - நத்தியே
மேவிவளர் வித்தகனை மேருவில்லி யானிடமாந்
தேவியருட் டேவைநெஞ்சே சேர். (௯)

முன்னை வினைப்பயனோ மூதறிவி லாததுவோ
என்னையினு மித்துயர்க்கே யேறவிட்டாய்-அன்னையன்றி
யேதோ வுறவுமகார்க் கேர்தணிகை வாழ்கஞ்சப்
போதாரும் பாதா புகல். (௧௦)

சரவண பவாவென்று சந்ததமும் போற்றிச்
சிரமணவ செங்கைதலைச் சேர்த்தி-வரவணரார்
கூந்தல்குறப் பெண்டனது கோமானைப் பொற்றணிகைக்
கேந்தலைநெஞ் சேயென்று மேத்து. (௧௧)

ஓகெடுவாய் நெஞ்சே யுனக்கொன் றுரைப்பேன்கேள்
வாகொடிய தாஞ்சகல வாதனையும்-போகவொழி
ஆலமிடத் திருத்து மண்ண லருமகவின்
காலைத் தணிகையிலே கண்டு. (௧௨)

இன்பாயென் னன்பே யிருங்கருணை மாகடலே
அன்பாவ தொன்றுமிலாத் தூயநின்-அன்பாவார்

ஆர்க்குமரு ளாரியனே யாதிமுதல் வன்முதலே
பார்க்குளெனைக் கண்பார் பரிந்து. (௧௩)

மூக்கிலா னுற்றழுங்க மூகுரனேர் காட்டல்
ஆக்கினா லென்ன வடியேன்முன்·வாக்கினால்
யாருமுனைப் பாடவல னாக்கியெனை நீக்கிற்
சேரும் பழியுனக்குத் தேர். (௧௪)

கற்றவனு மல்லேன் காசினியின் மாதவஞ்செய்
நற்றவரி னானொருவ னல்லேன்காண்-சற்றுமுனைச்
சிந்திக்கே னிந்திப்பேன் றீயனெனினுந்தணிகை
சந்திக்க நன்கருள்தந் தாள். (௧௫)

தணிகா சலாவென்று சந்ததமும் பேசியுனை
அணிகாத லாதலெற்கென் றுமோ-மணிமன்றத்
தாட்டுக்கா லாலன் றரக்கனுட லழுந்தக்
கூட்டிமிதித் தான்குமரா கூறு. (௧௬)

உள்ளத் துறுபகையு மோட்டமதி லுறவாய்
கள்ளத்தனமு நெஞ்சே காட்டுவையோ-வெள்ளமொடு
பிஞ்சுமதி சூடுசடைப் பெம்மான் றரும்பிள்ளை
கஞ்சமலர்த் தாள்கண்டுங் கைத்து. (௧௭)

உன்னி லுயர்தணிகை யோங்கலம ராறுமுகன்
றன்னியலே யன்றியொன்றுந் தானில்லை-யென்னிலுனக்
கேனோ யினித்துயர மென்னெஞ்சே யேங்கினது
தானோ தவயளிக்குஞ் சாற்று. (௧௮)

கற்றும் பயனென்னே கற்றானை கண்ணமணி
மற்றும் வனைந் தாவதென்னே வண்டணிகை-யுற்றன்
றரக்கர் தமைக்காய்ந் தமரரைக்காத் தாற்கண்
டிரக்கமுட னேத்தா திகந்து. (௧௯)

கொலைகளவு காமக் குரோதமுத லாரும்
அலைகடலை னீந்தியலைந் தாழ்[illegible]வோர்க்-கிலைகிலவு
வேலேந்தி வந்தென்வினை வீட்டித் தணிகையதின்
காலேந்தி யேறுவகை காட்டு. (௨௦)

தணிகா சலமதில்வாழ் சாமிதனை யுள்ளத்
தெணிகாதல் கொண்டிறைஞ்சி யேத்தில்-பிணிகாதல்
வாதனைபோ மேதமறும் வராதொரு சதியுஞ்
சோதனையாம் நெஞ்சே துணி. (உக)

ஓவியத்தா முண்கனிபோன் றோங்குபல தேவினடி
தாவியத்தா லின்பு தருமோதான்-பாவிநெஞ்சே
சாலப் புனல்புடைசூழ் தாலத் துறுதணிகை
வேலப் பிரான்கழலை விட்டு. (உஉ)

அன்பரவர் வேண்டுமவை யாவுமருள் வோனீயே
என்பரவை யென்றன்மாட் டின்றோநின்-அன்பில்லா
னென்றிகந்து விட்டனையோ யென்னோ யெனக்குறுதி
துன்றுதணி கைக்கரசே சொல். (உங)

வன்றொண்டு கொண்டுறவாய் வாதாடி னாரவரை
இன்றொண்டராயெண்ணி யின்புற்றாய்-என்றன்றொண்
டாங்கவற்றுளொன்றா யமையாதோ நற்றணிகை
காங்கேயா யேதுபிழை காட்டு. (உச)

ஒன்றுபகல் வானத்தொளிர் மதியிரு லென்னத்
துன்று மதுகரங்க டோய்துரும-[illegible] திர்றார்
திருத்தணிகை யானே தீவினையேன் மீதன்
பிருத்தி யெனையாளா யினி. (உரு)

வேதற்கு வேதவிழுப் பொருளோ துந்தணிகைக்
காதலனை யென்றுமகக் கண்ணினாற்-பேதமறப்
பார்க்கினெஞ் சேபஞ்ச பாதகம்போ மேதமுறா
தார்க்குமுற வாவா யறி. (உசு)

உன்னடியா னென்றிவ் வுலகறியப் பேசியுன்சீர்
பன்னுமடி யேற்கருட்கண் பாராயேற்-றுன்றுமிடர்
ஆழிவிழுந் தேங்குறுவே னையயிதற் கையமின்றே
வாழி[illegible] தணிகையிலே வாழ். (உஎ)

உன்னையன்றி வேறோ ருதவியெனக் கில்லெனுஞ்சீர்
தன்னை யறிந்த தணிகேசா-முன்னைவினை

நீக்கியெனை நின்னை நினைந்திருக்கச் செய்திலையேல்
பாக்கியுன்மே லாகும் பார். (உஅ)

வித்தகமாம் வேலால் விமலவுணக் குன்றுதுளைத்
தெத்திசையும் வெற்றிபுரிந் தேர்தணிகை-நத்தியே
மேவிவளர் வாழ்வை மேருவில்லி யானிடமாந்
தேவியருட் டேவைநெஞ்சே சேர். (உகூ)

ஒன்றுமொரு நன்றிசெயி னுள்ளத்தில் வைப்பரலால்
என்றுமெண் ணுதொழித்தா ரீங்கில்லை-இன்றெனெஞ்சே
பேருதவி செய்தயான் பெம்மான் றணிகைதொழற்
காருதவி யாவா ரறி. (௩0)

பித்தம் பிடித்துழலும் பேயரொனப் பேதுறுமுன்
மத்தமனனே தணிகை வாழ்வடிவேல்-நித்தனடித்
தாசர்தமைக் காணுந் தவாநெறியிற் சாரினின்பால்
நாசனடுக் குற்றொழிவா னம்பு. (௩க)

வென்றிதரு வாகுவொடு வீரர்க் கிடர்விளைத்த
குன்றொழித்து விண்காத்த கோமானே யென்றென்றும்
பாடியன்பர் வாழ்தணிகைப் பண்ணவனீ யென்னைத்
தேடிவினை தீர்ப்பதென்று செப்பு. (௩உ)

தந்தைகுணம் வந்திடுமச் சந்ததியர்க் கென்றுமாசம்
பந்தமுள தாற்றணிகைப் பண்டிதனே-நுந்தையன்று
தோலடியாற் றொட்டான் றுயரொழித்தா னவ்வழக்காற்
காலடியைத் தொட்டவெனைக் கா. (௩௩)

போதில்வரு புத்தேளும் பொக்குதிரு வைப்புணருந்
தீதில்திரு மாலுந் தினம்பரவக்-கோதிலா
தோங்குதணி கைக்கரனே யுத்தமனே பித்தனெனைப்
பாங்குபெற வருட்கண் பார். (௩௪)

எத்திக்கும் போற்று மெழிற்றணிகைத் தேவினடி
நத்தியென்றும் பத்தி நயந்துசெயின்-நித்தியமாம்
இன்பமொடு நாற்பதமு மேழ்கடல்சூ ழிவ்வுலகின்
நன்பதமு மெய்துமென நாட்டு. (௩௫)

பேராசை யாமூன்றிற் பேதுறுமெற் குன்னையன்றி
யாராசை சொல்லியவை யாற்றுவார்-ஓராசை
ஆடை யணிபரமர்க் கன்பார் தணிகைவள
நாடக்கண் பாராய் நயந்து. (௩௬)

தண்ணூர்ந்த சோமனுலாந் தண்டலைசூழ் தணிகைக்
கண்ணூர்ந்த காங்கயனைக் காணவரின்-பெண்ணூர்ந்த
ஓட்டமது வேட்டானை யொண்ணுதல்பா லோடிநயங்
காட்டெனவி ட்டான்கழலென் கண். (௩௭)

ஆசறுநற் கீர னருணகிரி நாதனிவர்
வாசகத்தை நீமகிழ்தல் வண்மையோ-பேசுமொரு
பிள்ளையுரை யோபேசாப் பிள்ளையுரை யோமகிழ்வு
கொள்ளுமனை நானிலத்திற் கூறு. (௩௮)

பச்சைமலை யுச்சியெழு பானுவென விளங்கு
செச்சையிவ ருந்தணிகைத் தேசிகநின்-இச்சையிலே
வாழ்ந்திருக்க த்தாழாதார் வந்தனைசெ யுன்னடிமை
தாழ்ந்திருக்கச் செய்ததெவன் சாற்று. (௩௯)

இன்னேயென் பாழ்நெஞ்சே யேதமிலா வேர்தணிகை
பொன்னேர் பொருப்பிலுறை போதனைநீ-சொன்னேனுன்
நத்துவையே ஞானமை நாடா னமனமிதி
வித்திலர்க் கென்னும் வினைவு. (௪0)
பகலுமிர வுந்தணிகைப் பண்ணவனை நெஞ்சே
இகலறவெண் ணுயேலின் பெங்ஙன்-தகவுண்
டரத்தமுத சேய்க்கோ வுறங்குமகற் கோபார்
பரத்தன்னை யூட்டுமின் பால். (௪௧)

வேண்டுமென்பர் வேண்டுமவை வேணதளிப்பானு
நீண்டகழற் றீண்டநினைத்தளவில்-மீண்டுலகில்
வாராவரமளித்து வாழ்விப்பா னுந்தொல்சீர்ப்
பேராந் தணிகைப் பிரான். (௪௨)

கமலமிசை வாழ்பிரமன் கைப்பணிவேண் டாதேன்
முமலமறுத் தாள்தணிகை மூதூர்-விமலனே
பேயனையே னின்புகழைப் பேசாதிருப்பினுமென்
றுயனையாய் நின்றனருள் தா. (௪௩)

கன்றுமிளங் கன்றகலக் கண்டதாய் கால்விரைந்து
சென்றதனைத் தேடியிடர் தீர்த்தலலால்-துன்றுமிளங்
கன்றோடு மோதணிகைக் கந்தனே வந்தென்வினை
இன்றோ டொழித்தா ளினிது. (சச)

கோதண்டம் பெற்றவனும் கோகனகத் துற்றவனும்
தீதண்டா தேத்துந் திருத்தணிகை-வேதண்டத்
துச்சியொளி ருத்தமனே ஓங்காரத் துட்பொருளே
நச்சுபெனை யாளாய் நயந்து. (சரு)

சந்தப் பொழில்[illegible]சூழ் தணிகாச லாசினது
கந்தமலர்த் தாளிணையிற் கண்கசிந்து-பந்தமுறப்
பூப்புனலிட் டேத்தும் பொறியுற்றி லேனெனினும்
காப்புனதே யன்றியிலை காண். (சசு)

என்றுமென் சொற்கிரங்கா யேர்தணிகை யானே
அன்றோரான் பற்குமன் பாகாயேல்-ஒன்றொழிந்த
ஆயிரவ ராங்கொருங் கா கார மாயரக்கன்
சேய்வாய்ப் புகுவரன்றோ செப்பு. (சஎ)

பொன்னே பொருளே புராரியருள் பொற்குன்றே
மன்னே மறையே மனுவடிவே-இன்னேயென்
சிந்தை களிக்கத் திருத்தணிகைத் தேவேநற்
சந்ததியுந் தண்ணருளுந் தா. (சஅ)

ஆறுமுகனை யமரர்சே னாபதியை
வேறுமுகன் பின்னுதித்த வித்தகனை-யேறுகைக்கு
மீசனுப தேசிகனை யெந்தையினை வான்றணிகை
வாசனையே வாழ்த்துகவென் வாய். (சகூ)

பூமாலை கொண்டுனது பூங்கழலைப் போற்றுதல்போல்
பாமாலை சூட்டித்தாள் பற்றினேன்-மாமாலை
பெற்றயெனக் கொண்ட பெம்மான் மகிழ்தணிகை
யுற்றவனே யாட்கொள் ளுவந்து. (ருo)

வாழி தணிகைமலை வாசனுமொள் வேலும்
வாழியிரு பெண்மயிலு மாமயிலும்-வாழியன்னு
நீண்டகர மீராறு நேர்விழியுஞ் செவ்வாயும்
மாண்புறுதா ளோடு மகிழ்ந்து. (ருக)

---